# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...



**சிதம்பரம் டீ.வி.?**

KALKI • 05.10.2008 • ரூ.10.00 • 96 பக்கங்கள்



**"ஸ்டாலின் போடும் தப்புக் கணக்கு!"**

**- விஜயகாந்த் விளாசல்**



**உத்திரவாதமான மேனிப் பராமரிப்பு**
**தலைமுறை தலைமுறையாக**

50 ஆண்டுகளுக்கும் மேலாக, மேனிப் பராமரிப்பில் ஸின்த்தால் நம்பகமான சோப் என்று தொன்றுதொட்டு பெயர் பெற்றுள்ளது. ஸின்த்தால் சோப் மேனியின் எழிலை மேம்படுத்துகிறது. இதன் ஒப்பற்ற நறுமணம் நாள் முழுவதும் நீடித்து உங்களை புத்துணர்வுடன் வைக்கும். எனவே ஸின்த்தால் பல தலைமுறைகளாக விசுவாசமான வாடிக்கையாளர்களை உருவாக்கியதில் ஆச்சரியமில்லை.




மேனிப் பராமரிப்பு என்றென்றும்

Orchard 8 GCPMSOCN 1167A8

# பிறைநாளில்...
# பேரின்பம் நிறைந்த
# தூய ஆபரணங்கள்




உங்கள்
விருப்பத்திற்கேற்ப
ரகங்கள் பலவிதம்,
தேர்ந்தெடுத்து மகிழுங்கள்,
பெருநாளை
பெருமைக்குரிய
நாளாக்குங்கள்.



இந்தியாவின் தன்னிகரற்ற தங்கமாளிகைகள்







(தி சென்னை சில்க்ஸ் அருகில்)

தி.நகர், சென்னை-17.போன்: 044-24330888 கோவை • திருப்பூர் • ஈரோடு • திருச்சி

shop online at www.sktm.in | spacious Car Parking with Showroom.

# தோள் விட்

## உடையழகு... நடை பழகு...

**கடைக்குப் போனாலும் சரி; விழா, விருந்து, பயணம் என்று எங்கு கிளம்பினாலும் சரி; பெண்களோடு ஒட்டிக் கொள்ளும் முதல் குழந்தை ஹேண்ட் பேக். ஹேர்பின் முதல் கிரெடிட் கார்டு வரை எல்லாமே இதற்குள்தான். இப்படி தோள் கொடுக்கும் தோழியாய் இருக்கும் ஹேண்ட் பேக் எப்படி இருக்கவேண்டும்? எங்கே வாங்குவது? இதோ சில டிப்ஸ்...**



- முதலில் பட்ஜெட் டிஸைட் பண்ணவும். ரூ.100-150யிலிருந்து சில ஆயிரங்கள் வரை பல வகைகளில் கிடைக்கின்றன. உங்களுடைய சாய்ஸ் என்ன? அது முக்கியம்.
- எதற்கு, என்ன மாதிரி உபயோகத்துக்காக ஹேண்ட் பேக் வாங்கப் போகிறீர்கள் என்பது அவசியம். தினசரி, ஆஃபீஸ், காலேஜ், பார்ட்டி... என ஏகப்பட்ட தேவைகள். அதற்குத் தகுந்தாற்போல் வாங்கவேண்டும்.
- நம்முடைய ட்ரஸ் ஸுக்கு மாட்சாகத்தான் ஹேண்ட்பேக் இருக்கவேண்டும் என எந்தக் கட்டாயமுமில்லை.
- லெதர் ஹேண்ட்பேக் வருடம் பூராவும், எந்த சீஸனாயிருந்தாலும், என்ன மாதிரி அக்கேஷனாக இருந்தாலும், 'தோள் கொடுக்கும் தோழன்'. கண்ணை மூடிக் கொண்டு வாங்கலாம்.
- நல்ல புடைவை, ரிச்சான அவுட்ஃபிட்டுடன் நல்ல தரமான ஹேண்ட் பேக் எடுத்துக்கொள்ள வேண்டும்.
- பிளாட்பாரத்தில் மலிவாகக் கிடைக்கிறதே என ஜிகு ஜிகு, பளபள ஹேண்ட் பேக் எடுத்துக்கொண்டால் உங்கள் காஸ்டியூம், லுக் எல்லாமே கோவிந்தா!

**ஒ**ரு ஹேண்ட் பேகில் என்ன இருக்க வேண்டும்?

- சின்ன டயரி, பேனா, சில்லறைக்காகக்கென தனி பர்ஸ் வாலெட், லிப் க்ளாஸ், வாஸலைன், ஹேர் க்ளிப், டிஷ்யூ பேப்பர், சன் க்ளாஸ்... இருக்கலாம். மற்றபடி அவரவர் சாய்ஸ்!
- கன்னாபின்னாவென்று திரப்பப்பட்டு ஷேப்பே மாறி, 'எனி டைம் உயிரை விட்டு விடுவேன்' எனப் பரிதாபமாக அழும் ஹேண்ட் பேகுகளும் உள்ளன.

**ச**ரி, டிஸைனர் பேக், கம்பெனியின் பெயர் என்னவென்று பார்ப்போமா?

● பர்பெர்ரி (Burberry) : 1856லிருந்து இருக்கும் ப்ரிட்டிஷ் டிஸைனர் ஹேண்ட் பேக், கார்ப்பரேட் பெண்கள், பார்ட்டி பெண்கள்... என எல்லாரின் ஃபர்ஸ்ட் சாய்ஸூம் பர்பெர்ரி தான்.

● லூயிஸ் வுட்டான் (Louis Vuitton): கடாமுடா பெயர் கொண்ட இந்த ஸ்டைல் ஹேண்ட் பேக், பெண்களின் கனவில்

## ங்காத் தோழன்

வந்து இம்சை பண்ணும் காஸ்ட்லி பேக். ஸ்டைல், க்ளாமர் விரும்பும் பெண்கள் இந்த ஃப்ரெஞ்சு ப்ராண்ட் பேகை மிக அதிகமாக வாங்குகிறார்களாம்.

● குச்சி (Gucci): பார்ட்டியில், கூட்டத்தில் தனித்துத் தெரிய விரும்பும் பெண்கள், குச்சி பேக் வாங்கி விடுகிறார்கள். ஒரு காஸ்ட்லி ட்ரஸ், மேக்கப் பண்ணாத வேலையை குச்சி பேக் எளிதாகப் பண்ணிவிடுமாம்.

● ப்ராடா (Prada) : 'கலர், மெட்டீரியல், டிஸைன், ஷேப் இவற்றில் ப்ராடா பேக்ஸ் ஆர் ஸோ ப்யூட்டிஃபுல்' என ஆனந்தக் கண்ணீரை வடித்துக்கொண்டே, அப்பா / கணவன் பர்ஸிலிருந்து பணத்தைக் காலி செய்வார்கள் பெண்கள்.

சர்வதேசத் தரமுள்ள இந்த ஹேண்ட் பேக்குகளின் விலை சில ஆயிரங்கள். ஆனால் இந்தியாவைப் பொறுத்தவரை (Hidesign) ஹைடிஸைன் மட்டுமே பிராண்டட் ஹேண்ட் பேக்!

ஹேண்ட் பேக் ஒரு கட்டாயத் தேவை. பல ரகசியங்களை மௌனமாகக் காக்கும் தோழி. வெளியே போகணும் என்றால் முதலில் பூட்டுச் சாவியைத் தேடுவதில்லை; ஹேண்ட் பேகை எடுத்து முதலில் மாட்டிக்கொண்டு விடுவார்கள். அப்படி ஒரு ஃப்ரெண்ட்ஷிப்!

**– லதா சேகர்**




# கல்கி

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர்: **சீதா ரவி**
உதவி ஆசிரியர்: **கதிர்பாரதி**
வடிவமைப்பு:
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி:
044 - 4343 8888 (30 lines)
தொலைநகல்: 044 - 4343 8899
மின்னஞ்சல் - ஆசிரியர் குழு:
kalki@kalkiweekly.com
விளம்பரப் பிரிவு:
marketing@kalkiweekly.com
சந்தா பிரிவு:
subscription@kalkiweekly.com
பிற தகவல்கள்:
info@kalkiweekly.com
கல்கி இண்டர்நெட் முகவரி:
www.kalkionline.com
சந்தா விவரம் - உள்நாடு:
**ஒரு வருடம் : ரூ. 500/-**
**ஆறு மாதம் : ரூ. 270/-**
வெளிநாடு (விமானத்தபால்):
**ஒரு வருடம் : ரூ. 3,800/-**

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

# - விஜயகாந்த்

கம்யூனிஸ்ட் தலைவர்களோடு சந்திப்பு, இளைஞரணி மாநாட்டுக்கான தயாரிப்பு, நடிகர் வடிவேலுவோடு மோதல் என பரபரப்பாகவே இருக்கிறது, தே.மு.தி.க. தலைவர் விஜயகாந்தின் அரசியல் களம். அவர் நம்மோடு பேசியதிலிருந்து இங்கே...!

# "ஸ்டாலின் போடும் தப்புக் கணக்கு!"

**இளைஞர் மாநாடு :**

அதிகாரம் எங்களிடம் இல்லாவிட்டாலும், தனிப்பட்ட முறையிலும், கட்சி சார்பிலும், நிறைய உதவிகளை இளைஞர்களுக்குச் செய்து

## விளாசல்



வருகிறோம். விருத்தாசலத்தில் கம்ப்யூட்டர் மையம் நடத்தி வருகிறோம். தி.மு.க. பிரமுகர்களின் பிள்ளைகளும் படிக்கிறார்கள். சமீபத்தில் 600 கம்ப்யூட்டர்கள் வாங்கி தமிழ்நாடு முழுவதும், பயிற்சி மையங்கள் நடத்தக் கொடுத்துள்ளோம். 100 ஆட்டோக்கள் வாங்க நிதியுதவி செய்கிறோம். இவற்றையெல்லாம் விட மிக முக்கியமாக ஒரு லட்சம் இளைஞர்களுக்குத் தனியார் துறையில் வேலை வாய்ப்பை ஏற்படுத்தித் தர இருக்கிறோம். தி.மு.க. அரசு, தொலைக்காட்சிப் பெட்டிகளை கட்சிக்காரர்களுக்குக் கொடுப்பது போல செயல்பட மாட்டோம்.

### பாசமிகு கம்யூனிஸ்டுகள் :

**நா**ன் மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் தலைவர் வரதராஜன் அவர்களைச் சந்தித்தவுடன், பலவிதமான யூகங்கள் உலவி வருகின்றன. கம்யூனிஸ்ட்கள் எந்தவித சுயலாபமும் எதிர்பாராமல் மக்களுக்கு உழைத்து வருபவர்கள். வறுமையையும், ஊழலையும் ஒழிக்கவேண்டுமென்று உண்மையிலேயே போராடி வருபவர்கள். ''விஜயகாந்த் மூன்றாவது அணிக்கு தலைமை தாங்குவாரா?'' என்றெல்லாம் பேச்சு துவங்கிவிட்டார்கள். மூன்றாவது அணி என்று சொல்லாதீர்கள். நாங்கள் முதல் அணி. ஒன்று மட்டும் நிச்சயம். தி.மு.க. - அ.தி.மு.க.வோடு நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ எந்தத் தொடர்பும் வைத்துக் கொள்ள மாட்டோம்.

### தமிழன் ஏமாற்றப்படுகிறான் :

**த**மிழர்களை கருணாநிதியும், ஜெயலலிதாவும் ஏமாற்றி, சுரண்டி அரசியலில் பிழைப்பது ஒரு பக்கம் இருக்க, சுற்றியுள்ள மாநிலங்கள் தமிழகத்தை வஞ்சிக்கின்றன. கர்நாடகம், காவிரிக்குத் தடைபோடுகிறது. பாலாற்றில் அணை கட்டப் போகிறோம் என்று ஆந்திர அரசு நம்மை மிரள வைக்கிறது. முல்லைப் பெரியாறு பிரச்னையில் தமிழகத்தை வஞ்சிக்கிறது கேரளா. மொத்தத்தில் தேசிய நீரோட்டத்தில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்ட தமிழனை குறுகிய சிந்தனைக்குத் தள்ளிவிடுகிறார்கள் இவர்கள். எந்தப் பிரச்னையையும் தீர்க்க முயற்சி செய்யாமல், கவிதை எழுதுவது, குடும்பத்தைக் கொஞ்சுவது என்று நேரத்தைச் செலவு செய்து கொண்டிருக்கிறார் கருணாநிதி.

### வீராசாமி வெற்றுச்சாமி :

**க**டந்த சில மாதங்களாக ஆற்காடு வீராசாமி மீது நிறைய விமர்சனங்கள் வைத்தாகி விட்டது. ஆனால் எதற்கும் அசராமல் இருக்கிறார் அவர். 'காற்று வீசினா கரண்ட் கிடைக்கும்' என்று சொல்வதற்கு ஒரு அமைச்சர்! தி.மு.க., அ.தி.மு.க. இரண்டு கட்சிகளுமே, கடந்த பத்தாண்டுகளில்,

தமிழகத்தின் மின் தேவையைக் கணக்கில் கொண்டு, மின் உற்பத்தியைப் பெருக்க முயற்சி செய்யவில்லை. தன் குடும்ப நலத்துக்கு, தங்களுக்கு வேண்டிய இலாக் காக்கள் பெறுவதற்கு, மத்திய அரசைப் பயன்படுத்திக்கொள்ளும் கருணாநிதி, நெய்வேலியில் உற்பத்தியாகும் மின்சாரம் தமிழகத்துக்கு மட்டுமே என்று ஏன் போராடவில்லை? நெய்வேலி முதல்கட்ட மின்நிலையம் அமைக்கப்பட்டபோது, தமிழகம் மட்டுமே அதன் பயனாளி என்று முடிவெடுக்கப்பட்டது கருணாநிதிக்குத் தெரியுமா?

**பள்ளிக் கணக்கு : புள்ளிக் கணக்கு :**

உள்ளாட்சி அமைச்சர் ஸ்டாலின், சுயஉதவிக் குழுக்கள் துவக்கப்பட்டதற்கு காரணம் தி.மு.க. அரசு தான் என்கிறார். ஆனால் ப.சிதம்பரமோ, ''காங்கிரஸ் அரசுதான் சுயஉதவிக் குழுக் களை அறிமுகப்படுத்தியது; ஆனால் பத்திரிகைகள் அதைப் போடுவதில்லை'' என்று கண்ணீர் வடிக்கிறார். மத்திய திட்டக் குழு துணைத் தலைவர் நாட்டின் ஒட்டுமொத்த வளர்ச்சி விகிதம் பற்றிப் புள்ளிவிவரம் சொல்லிவிட்டுச் சென்றால், ஸ்டாலின், தமிழ்நாடு உச்சாணிக் கொம்பில் இருப்ப தாக அவர் ஒரு புள்ளிவிவரம் தருகிறார். இரண்டுக்கும் தொடர்பே இல்லை. பாவம், ஸ்டாலினுக்குப் பள்ளிக் கணக்கும் தெரியலை; புள்ளிக் கணக்கும் தெரியலை.



**"வடிவேலுவை எங்கள் கட்சியின் கடைக்கோடி தொண்டன் கூட தோற்கடிப்பான்!"**

**படுத்தும் பா.ஜ.க. :**

இந்தக் கட்சி அதிகாரத்தில் இருக்கும் மாநிலங்களில் சிறுபான்மையோர் மீது வன்முறை ஏவி விடப்படுகிறது. சிறுபான்மையோரைக் காக்கும் பெரிய கடமை பெரும்பான்மையோருக்கு உண்டு. மேலும் மதமாற்றத்தில் சிறுபான்மை யோர் ஈடுபடுகிறார்கள்.. என்று சொல்வது சரியல்ல. மனிதன் மதம் மாறுவது என்பது அவனது தனிப்பட்ட உரிமை. உளப்பூர்வ மாக ஒருவன் வேறு மதத்தை ஏற்றுக் கொள்ளாவிட்டால், விரைவில் தாய் மதம் திரும்பிவிடுவான். மேலும் இந்தப் பிரச்னைகளையெல்லாம் விட மனிதனின் வறுமையைப் போக்க முயலவேண்டும். இதை பா.ஜ.க. உணர்ந்தால் அந்தக் கட்சிக்கு நல்லது.

**எப்படிச் சாத்தியம்? :**

எங்கள் செல்வாக்கை வீழ்த்தத்தான் மலிவு விலை ஒரு ரூபாய் அரிசியைக் கொண்டு வந்திருக்கிறார் கருணாநிதி. நாங்கள் ஆட்சிக்கு வந்தால் ரேஷன் பொருட்களை வீட்டுக்கே கொண்டுவந்து கொடுப்போம் என்று சொன்னதைக் கிண்டலடித்தார்கள். இப்போது இரண்டு கோடி பொட்டலங்கள் போட்டு மசாலா சாமான்களை எப்படிக் கொடுக்கப் போகிறார்கள்? கறவை மாடு கொடுப்போம் என்று சொன்னதற்கு சிரித்தார்கள். இப்போது வீட்டுக்கு மாடு திட்டத்தை அரசே அறிமுகப்

## மானுட சேவைக்கு பேதமில்லை

தங்கள் முதியோர்களைப் பராமரிக்கப் பணம் கொடுத்தாலும் தகுந்த முதியோர் இல்லம் கிடைக்கவில்லையே என்று கவலைப்பட்டுக் கொண்டிருப்பவரா நீங்கள்?

**JUST RELAX PLEASE!**

உங்களுடைய கவலையை சுகமாய்ப் பகிர்ந்துகொள்ள காத்திருக்கின்றது.

**SEA BREEZE RESEARCH & DEVELOPMENT CENTRE**

* அவரவர் விருப்பத்திற்குத் தகுந்தாற்போல் தனி நபர், தம்பதியர், பொது அறை வசதிகளும் உண்டு.
* சைவ உணவு, தொலைக்காட்சி, பத்திரிகை, சுற்றுலா என பொழுதுபோக்கு வசதிகளும் உண்டு.
* அவரவர் தகுதிக்குத் தகுந்தாற்போல் மாதக் கட்டணம், வருடக் கட்டணம், ஆயுள் கட்டண முறைகளில் சேர்த்துக் கொள்கின்றோம்.
* பசுமை தூய்மையோடு 24 மணி நேர மருத்துவ சேவை, வாகன வசதி, பணியாளர் சேவையோடு காத்துக் கொண்டிருக்கிறோம்.
* வயதான தம்பதியர் தங்களுக்குக் குழந்தை மற்றும் உறவினர் இல்லையே! நம் கடைசி காலம் எப்படி இருக்குமோ? இறுதிச் சடங்குகளை யார் செய்வார்களோ என்ற கவலை வேண்டாம். அவரவர் மத முறைப்படி ஸ்ப்ரீஸ் முதியோர் இல்லம் ஈமச்சடங்குகளைச் செய்கிறது.

**ஸ்ப்ரீஸ் முதியோர் இல்லம்**

(Regd.) Near P.T.C. Quarters.

24, M.R.G. Nagar, முட்டைகாரன்சாவடி, துரைப்பாக்கம், சென்னை - 97

போன் : 24963949 செல் : 9444021417 E.mail : fathimatrust@fathimasyed.com

நன்கொடைக்கு வருமானவரி விலக்கு (80G Income Tax Exemption) உண்டு.

**நடமாட முடியாதவரையும் பராமரிக்கிறோம்.**

**மகிழ்வித்து மகிழ்வோம்**


படுத்துகிறது. அரசு ஊழியம் செய்யும் பெண்களுக்கு ஆறு மாதம் பிரசவ கால விடுமுறை கொடுக்கவேண்டும் என்றோம். மத்திய அரசு இப்போது ஆணை போட்டிருக்கிறது.

### வடி(பொடி)வேலு :

**சி**லரது தூண்டுதலின் பேரில் பகடைக் காயாகச் செயல்படும் வடிவேலு, இப்போது நேரடியாக என்னை வம்புக்கிழுக்கிறார். என்னுடைய படங்களில் நடிக்கும் போது, முதல்வர் என்று வசனம் பேச நான் சொன்னேன் என்றும், ''அது முடியாது'' என்று மறுத்ததால்தான் கோபம் என்றும் கூறுகிறார் வடிவேலு. கடைந்தெடுத்த பொய். என் படங்கள் அனைத்துமே சீரியஸான படங்கள். அவற்றில் காமெடிக்கு அதிக வேலை இல்லை. கருணாநிதி - ஜெயலலிதா என்ற இரு தலைகளை எதிர்த்து துணிந்து அரசியல் செய்துகொண்டிருப்பவன் நான். என்னை எதிர்த்துப் போட்டி போடுவேன் என்று சொல்லி சிரிக்க வைக்கிறார் வடிவேலு. அவரை எங்கள் கட்சியின் கடைக்கோடி தொண்டன்கூட தோற்கடிப்பான். எங்கள் கவனத்தைச் சிதறடிக்க வேண்டாம் என்பதே அவருக்கு என் அட்வைஸ்.



- ப்ரியன்



# ஒருநாள் வாடகை ஒரு லட்சம்!

**சமீபத்தில் திருச்சியில் 'கலைஞர் அறிவாலயம்' திறப்பு விழா, தி.மு.கழகத்தின் முப்பெரும் விழா நடைபெற்றது. விழாத் துளிகள்.**

● ஒன்னே கால் லட்சம் சதுர அடி நிலத்தில், 60,000 சதுர அடியில் கட்டப்பட்டுள்ளது கலைஞர் அறிவாலயம். மூன்று தளங்களைக் கொண்டது. முற்றிலும் குளிர்சாதன வசதி செய்யப்பட்டுள்ளது.

● ஒரே சமயத்தில் அறுநூறு பேர் அமர்ந்து சாப்பிடக்கூடிய உணவுக் கூடம்.

● முதல் தளத்தில் ஆயிரத்து ஐந்நூறு பேர் அமரத் தக்க வகையில் கலைஞர் அறிவாலய அரங்கு. அடுத்த தளத்தில் லாபியில் அறுநூறு பேர் அமரும் வகையில் 'யு' வடிவ மேல் அரங்கு. திருமணம் முதல் அனைத்து விசேஷங்களும் நடத்தும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது.

● ஒருவழியாக மாலை பொதுக் கூட்டத்தில் பெரியார் விருது கலைஞருக்கும், கலைஞர் விருது மு.க.ஸ்டாலினுக்கும் வழங்கப்பட்டன. (தொண்டர்களுக்கு ஆத்ம சாந்தி)

● திருச்சி மாவட்ட தி.மு.க. நடத்திய கட்சியின் முப்பெரும் விழா பொதுக் கூட்டத்தில், குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் கலந்து கொண்டது அனைவரின் கவனத்தையும் ஈர்த்தது.



● பாரதிதாசன் பல்கலைக் கழகத் துணைவேந்தர் பொன்னவைக்கோ, விழா மேடையின் நடைபாதையில் இங்கும், அங்குமாக நடை பயின்று கொண்டிருந்தார். (அது சரி. அவர் எப்போது தி.மு.க.வில் உறுப்பினர் ஆனார்?)

● "காலையில் கலைஞர் அறிவாலயம் திறந்து வைத்திட ரிப்பன் வெட்டுவதற்கென என்னிடம் தங்கத்தினால் ஆன கத்தரிக்கோல் ஒன்றினைத் தந்தார்கள். அதனைக் கொண்டு நானும் பலமுறை வெட்டினேன். ரிப்பன் வெட்டுப்படவே இல்லை. பின்னர் இரும்பு கத்திரிக்கோல் கொண்டுவந்து தந்தார்கள். அதுதான் வெட்டியது! ஏன்? இது ஏழைகள் கட்டிய மாளிகை. சாதாரண கத்தரிக்கோல் தான் ரிப்பன் வெட்ட இங்கு பயன்பட்டிருக்கிறது!" எனக் குறிப்பிட்டார் கலைஞர்.

★ ஏழைகள் கட்டிய இந்தக் கலைஞர் அறிவாலயத்தில் திருமணம் மற்றும் விசேஷ காரியங்கள் செய்ய ஆசைப்பட்டால், ஒரு நாள் வாடகை ரொம்ப அதிகமில்லை. ஜஸ்ட் லைக் தட், ஏழைகளின் சிரிப்பில் இறைவனைக் காண்பதற்காக, குறைந்தபட்சம் ஒரு லட்ச ரூபாய்க்கும் மேல்!

**- புதியவன்**

ஸ்ரீ மதே நாராயணாய நம: ஸ்ரீ மதே இராமானுஜாய நம:

பைந்தமிழ்ப் பின் சென்ற பச்சைப் பசுங்கொண்டலே! ஆழ்வார் திருவடிகளே சரணம்!

# நாலாயிர திவ்யப் பிரபந்தம்

நான்காம் பதிப்பு, மூலம் - நயவுரை - ஆங்கில மொழி பெயர்ப்புடன்

## நூல் வெளியீட்டு விழா அழைப்பிதழ்

நாள் : 1.10.2008 புதன் கிழமை, மாலை 5 மணி    இடம் : வாணி மஹால், தியாகராய நகர்

### நிகழ்ச்சி நிரல்

**கருத்தரங்கம்**

| | | |
|---|---|---|
| தலைப்பு | : | **அவதார நோக்கம்** |
| தலைவர் | : | முனைவர் திரு. **சோ.சத்தியசீலன்** அவர்கள் |
| கருத்துரை | : | முனைவர் **சரஸ்வதி இராமநாதன்** - வாமனாவதாரம் |
| | | புலவர் **கோ.சாரங்கபாணி** - நரசிம்மாவதாரம் |
| | | முனைவர் திரு. **இரா.செல்வக்கணபதி** - இராமாவதாரம் |
| | | முனைவர் திரு. **தி.இராசகோபாலன்** - கிருஷ்ணாவதாரம் |
| நூல் வெளியீடு | : | மாலை 6.30 மணி |
| வரவேற்புரை | : | டாக்டர் திரு.**எஸ்.ஜெகத்ரட்சகன்** அவர்கள்<br>ஆழ்வார்கள் ஆய்வு மைய நிறுவனர், செயலாளர் |
| தலைமை | : | அருளாளர் திரு.**இராம.வீரப்பன்** அவர்கள்<br>தலைவர், ஆழ்வார்கள் ஆய்வு மையம் |
| நூலை வெளியிட்டுச் சிறப்புரை | : | அரசத்திரு **என்.கோபால சுவாமி** அவர்கள்<br>இந்தியத் தலைமைத் தேர்தல் ஆணையர், புதுதில்லி |
| முதல்பிரதி பெறுபவர் | : | இசை இமயம், இசைஞானி **இளையராஜா** அவர்கள் |
| வாழ்த்துரை | : | அறநிலையத்துறை ஆணையர்<br>திரு. **த.பிச்சாண்டி** இ.ஆ.ப. அவர்கள்<br>காவியக் கவிஞர் திரு. **வாலி** அவர்கள்<br>முனைவர் திரு. **ஔவை நடராசன்** அவர்கள்<br>சொல்வேந்தர் திரு. **சுகிசிவம்** அவர்கள்<br>திரு. **நாகை முகுந்தன்** அவர்கள் |



அன்புடன் அழைக்கும்

அடியை நினையும் அடியவர்தம் அடிகள் மெய்ப்படியான் பணிவார்ந்த

**எஸ்.ஜெகத்ரட்சகன்**

ஆழ்வார்கள் ஆய்வு மைய நிறுவனர், செயலாளர்

அனைவரும் வருக!    அமுத தமிழ் பருக!!

# கோயில் நிலம் யாருக்கு?

கடந்த சில வருடங்களாக ஸ்ரீரங்கம் ரெங்கநாத பெருமாள் கோயிலைச் சுற்றியுள்ள பகுதிகளில் வீடு களை விற்கவோ - வாங்கவோ முடியவில்லை. விற்பனையாகும் பட்சத்தில், வீட்டுக் கிரயம் மற்றும் முத்திரைக் கட்டணம் முழுவதும் செலுத்தியும்கூட பத்திரப் பதிவு அலுவலகத்திலிருந்து, பதிவான பத்திரங் களைத் தருவதில்லை. காரணம், அவை அனைத்துமே 'ஸ்ரீ ரெங்கநாத சுவாமி'க்குச் சொந்தமான இடங்கள் என்கிறது கோயில் நிர்வாகம். இதுபோன்ற சூழலில் 'அடிமனை வாடகை திருக்கோயிலுக்குத் தரப்பட வேண்டும்!' என்கிற நோட்டீஸ் கோயில் நிர்வாகம் சார்பில் பலருக்கும் அனுப்பப்படு கிறது. அடி மனை உரிமை அரங்கனுக்கா? அல்லது அவரவர்க்கா? களத்தில் இறங்கினோம்...



* எஸ். நடராஜன்

**பட்டா ராஜகோபால், கீழச்சித்திரை வீதிவாசி :**

நான் வசிக்கும் கீழச் சித்திரை வீதி வீடு, நான்கு தலைமுறைக்கு முற்பட்ட காலத்திலேயே எங்கள் முன் னோர்களுக்குச் சொந்தமானது. இப்போது திடீரென கோயில் நிர்வாகம் எல்லா வீட்டுக்காரர் களையும் காலி செய்யச் சொல் வதோ, அடிமனை உரிமை கோருவதோ சட்டத்துக்குப் புறம்பானது ஆகும்.



* சுப்ரமணியன்

**மோகன்ராம், அனுமன் சேனா அமைப்பாளர் :**

கோயிலுக்குப் பூக்களும் மாலையும் அளிக்கும் காவேரிக் கரையிலுள்ள மதுரகவியாழ்வார் நந்த வனத்தின் பெரும் பகுதி கருங்கிப் போய்விட்டது. தற்போது இருக்கும் அமல ஆசிரம தேவாலயமும் கட்ட டங்களும் முன்னொரு காலத்தில் 'ஸ்ரீ ரெங்கநாத சுவாமி'க்குச் சொந்த மானதாகத்தானே இருந் திருக்கும். அதனை மீட் பதற்கு நோட்டீஸ் அனுப் புமா கோயில் நிர்வாகம்?



* மோகன்ராம்

# வெடிக்கும் ஸ்ரீரங்கம் சர்ச்சை!

பணம் பெற இயலவில்லை. இது அடிப்படை சிவில் உரிமைக்கு எதிரானது.

**சுப்ரமணியன், நரியன் தெரு :**
என் அப்பா காலத்திலிருந்து கடந்த 65 வருடங்களாக, கோயில் நிர்வாகத்துக்கு அடிமனை வாடகை செலுத்தி வருகிறோம். 660 சதுர அடியிலுள்ள மண் சுவர் வீட்டுக்கு, மாதம் ஒண்ணேகால் ரூபாய்க்கு ஆரம்பித்து இப்போது 95 ரூபாய் ரசீதோடு செலுத்தி வருகிறேன். கோயில் நிர்வாக முடிவு சரியானதே.

**கே. பிரபாகர், வழக்குரைஞர், வடக்கு உத்திர வீதி :**
டைட்டில் டீட் 1027 இனாம் உரிமைப் பட்டயத்தின் கீழ் 320 ஏக்கர் வருகிறது. ஸ்ரீ ரெங்கநாதர் கோயில் நீங்கலாக மீதம் உள்ள 264 ஏக்கரில் அமைந்திருக்கும், கட்டிடங்களின் அடிமனை முழுவதுமாக 'ஸ்ரீ ரெங்கநாத சுவாமி'க்குச் சொந்தம் என்கிறது கோயில் நிர்வாகம். 1963ல் கொண்டு வரப்பட்ட இனாம் ஒழிப்புச் சட்டத்தின் மூலமாக அந்தச் சொத்துக்களை அரசே எடுத்துக் கொண்டது. பின்னர் வந்த வருடங்களில் அந்தந்தக் குடியிருப்பு உரிமையாளர்களுக்கே, அரசு பட்டா வழங்கியுள்ளது. மேலும், 1027க்கான பரப்பளவுக்கு தமிழக அரசு


✱ பட்டா ராஜகோபால்


✱ கே. பிரபாகர்

**எஸ். நடராஜன், திருச்சி மாவட்ட காங். முன்னாள் தலைவர் :**
கோயில் நிர்வாகத்தின் நோட்டீஸ் ஸ்ரீரங்க வீட்டு உரிமையாளர்களின் அடிப்படை வாழ்வாதாரத்தைக் கேள்விக்கு உள்ளாக்கிவிட்டது. இதனால் சுதந்திரமாக வீட்டை யாரும் விற்க முடியவில்லை. அவசரத் தேவைகளுக்காக வங்கிகளில் அடமானம் வைத்துக்கூட


* மா. கவிதா

**ஸ்ரீரங்கம் கோயில் இணை ஆணையர் மற்றும் செயல் அலுவலர் மா.கவிதா நம்மோடு பேசினார்...**

"டைட்டில் டீட் 1027 தேவதாய இனாம் சொத்தில் சுமார் 320 ஏக்கர், 'ஸ்ரீ ரெங்கனாத சுவாமி' பெயரில்தான் இருக்கிறது.

வசிப்பிடதாரர்கள் எவரையும் இடத்தைக் காலி பண்ணச் சொல்லவில்லை. கோயிலுக்கு அடிமனை வாடகைதாரர்களாக ஆகிவிடுங்கள் என்றே வலியுறுத்தப்பட்டுள்ளது. இதனை மறுக்கும்பட்சத்தில் அவர்களை ஆக்ரமிப்பாளர்களாகக் கருதி, அந்த இடத்தைக் கோயில் நிர்வாகம் கையகப்படுத்தும்.

அம்மா மண்டபம் காவிரிக்கரையில் மதுரகவியாழ்வார் நந்தவனம் சுருங்கிப் போகவில்லை. முன்னர் தென்னந்தோப்புகளாக இருந்த இடத்தில்தான் அமல ஆசிரம தேவாலயம் மற்றும் கட்டடங்கள் அமைந்துள்ளதாகக் கூறப்படுகிறது. அந்தப் பகுதி கோயில் இடமாக இருக்குமேயானால், அமல ஆசிரம நிர்வாகத்துக்கும் கோயில் நிர்வாகம் நோட்டீஸ் அனுப்பும்.

டைட்டில் டீட் 1027ன் கீழ் வரும் இடங்கள் யாவும் கோயிலுக்குச் சொந்தம். கட்டடங்கள் அதனதன் உரிமையாளர்களுக்குச் சொந்தம். அனைவரும் வாடகைதாரர்களாக ஆகும் போது, அந்த அடிமனைகளுக்கான சொத்து வரி அவர்கள் செலுத்த வேண்டியதில்லை. அதனைக் கோயில் நிர்வாகமே மாநகராட்சிக்குச் செலுத்திவிடும். அப்போது குடிநீர், தெருவிளக்கு, சாலை வசதி போன்றவைகள் என்ன ஆகும் என்கிற கேள்வி எழத் தேவையில்லை.

குறிப்பிட்ட டைட்டில் டீட் 1027 தேவதாய இனாம் சொத்தின் 320 ஏக்கரில் 3043 சர்வே எண்களுக்கான இடங்கள் அமைந்துள்ளன. இதில் இரண்டு சர்வே எண்களுக்கான இடங்களுக்கு மட்டுமே கோயில் நிர்வாகம் அரசிடமிருந்து தஸ்திக் அலவன்ஸ் பெற்று வருகிறது. மீதம் உள்ள சர்வே எண்களில் வசித்துவரும் கட்டட உரிமையாளர்களிடம் தான் கோயில் நிர்வாகம் அடிமனை வாடகை கோருகிறது.

சமீபத்தில் வெளியான அரசாணை, 'திருக்கோயில் இடங்களில் முப்பது வருடங்களுக்கு மேல் தன் சொந்தக் குடியிருப்பாகக் கருதி ஒருவர் வசித்து வந்தால், அவர்களை ஆக்ரமிப்பாளர்களாகக் கருதி வெளியேற்றாமல், அடிமனை வாடகைதாரர்களாக அங்கீகரிக்க வேண்டும்!' எனக் கூறுகிறது. அதனைச் செயல்படுத்தும் வகையில்தான் கோயில் நிர்வாகம் செயல்பட்டு வருகிறது."

1965 முதல் தஸ்திக் அலவன்ஸ் (Dustic Allowance) தொகையினை, மாவட்ட நிர்வாக அரசுக் கருவூலம் வாயிலாக பசலி (ஆண்டு)தோறும் கோயில் நிர்வாகத்துக்குத் தந்து வருகிறது. இந்த உதவியைப் பெற்றுக்கொண்டு, அடிமனை அனைத்தும் கோயிலுக்கே சொந்தம் என கோயில் நிர்வாகம் சொல்வது சட்டத்துக்கு முரண் ஆகும்.

செய்தியும், சித்திரங்களும் :

**ஸ்ரீரங்கம் திருநாவு**

# ஸ்ரீ காமாட்சி சில்க்ஸ் ™

வாடிக்கையாளர்களின் வசதிக்கேற்ப **தீபாவளியை** முன்னிட்டு

மும்பையிலும் எங்கள் புடவைகளின் **கண்காட்சி** மற்றும் **விற்பனை**

## NAVIMUMBAI TAMIL SANGAM

9-A, Sector, (Behind Vashi Bus Termines)
Navi Mumbai - 400 703. Ph: 022-27662434
From : 11-10-2008 to 26-10-2008



# 50%

காஞ்சிபுரம் பட்டுச் சேலைகள்
விழாக்கால சிறப்பு
தள்ளுபடி விற்பனை

பழைய காஞ்சிபுரம்
வெள்ளி ஜரிகை
பட்டுச்சேலைகள்
எந்த நிலையிலும்
எக்ஸ்சேஞ்ச்
செய்யப்படும்

Master & Visa Card Accepted

சில்க் காட்டன் சேலைகள், சுங்கடி காட்டன் சேலைகள்
எம்ப்ராய்டரிங் சேலைகள், பேன்ஸி சுடிதார்கள் உள்ளன.

எண்: 13/7, [அடி தளம்] வடக்கு மாட வீதி, மயிலாப்பூர், சென்னை – 4.
[கபாலீஸ்வரர் கோயில் அருகில்] போன் : 044 : 2493 3097, 2461 0444



# கல்கி



2008 அக்டோபர் 5
ஸர்வதாரி புரட்டாசி 19
மலர் : 67
இதழ் : 10

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்*

## தமிழகத்தின் நலன் கருதுமா தே.மு.தி.க.?

**யா**ர் விரும்பினாலும் விமர்சித்தாலும், விஜயகாந்த் இன்று தமிழ்நாட்டின் எதிர்காலத்தை நிர்ணயிக்கக்கூடிய அரசியல் சக்தியாக விளங்குவதை மறுப்பதற்கில்லை. திரளான மக்கள் அவரது கூட்டத்துக்கு வருகின்றனர்; அவரைத் தலைவராக ஏற்றுள்ளனர்.

ஆனால், கூட்டத்துக்கு வரும் அத்தனை பேரும் தமக்குத்தான் வாக்களிப்பார்கள் என்று விஜயகாந்த் அனுமானிப்பது தப்புக்கணக்காகி விடும். எம்.ஜி.ஆர். தனித்துக் கட்சி ஆரம்பித்தபோது எழுந்தது போன்ற ஆர்வ அலை, இப்போது தமிழக அரசியலில் இல்லை. இந்தச் சூழலில், விஜயகாந்த் தனியாகப் போட்டியிடுவதால் சில பல தொகுதிகளை வென்று நல்ல எதிர்க்கட்சியாக விளங்கலாமேயொழிய ஆட்சி அமைக்கவோ, ஆட்சி அமைப்பதில் முக்கியப் பங்கு வகிக்கவோ முடியாது. ஆனால், அவர் தனித்துப் போட்டியிடுவதால் வோட்டுகள் பிரிந்துபோய், வலுவான அரசு அமைவதற்கான சூழல் நிச்சயம் பாதிக்கப்படும். தமிழ்நாட்டுக்கு இந்த இக்கட்டைத் தர விஜயகாந்த் விரும்புகிறாரா?

கம்யூனிஸ்டுகள் கோரியது போல், அவர்களுடன் இணைந்து மூன்றாவது அணி அமைத்தாலும் இதே இக்கட்டுதான் ஏற்படும். மேலும், கொள்கைரீதியான மோதல்கள் ஏற்படாமல் கம்யூனிஸ்டுகளு

ஆட்சியில் பங்கு
தட்டுங்கள் திறக்கப்படும் கேளுங்கள் கொடுக்கப்படும்
சும்மா நீங்களே தட்டிக்கிட்டிருந்தா எப்படி... அன்னை வந்து தட்டுனாத்தான், திறப்போம்; தெரிஞ்சுக்கங்க!




டன் எந்தக் கட்சியும் நீடித்து ஆட்சி செய்வது துர்லபம். தி.மு.க., அ.தி.மு.க.வுடனான கூட்டணி என்கிற பேச்சுக்கே இடமில்லை; பா.ம.க.வும் விஜயகாந்தை ஏற்கவில்லை என்கிற சூழலில், காங்கிரஸுடன் கூட்டணி அமைக்கிற ஒரு சாத்தியக்கூறு மட்டுமே மிஞ்சுகிறது.

மைனாரிட்டி ஆட்சி அமைப்பதில் தவறில்லை என்று கருதிய தி.மு.க. தலைவர் கூட, இன்று பா.ம.க.வும் கம்யூனிஸ்டுகளும் கூட்டணியிலிருந்து விலகிவிட்ட அச்சத்தினால், காங்கிரஸுக்கு ஆட்சியில் பங்கு அளிக்க முன்வந்துள்ளார்! இதுபோன்ற ஸ்திரமற்ற நிலைமைக்கு இடங்கொடாமல், தே.மு.தி.க. எதிர்வரும் தேர்தலில் சிறந்த முறையில் காங்கிரஸுடன் கூட்டணி வைத்துக் கொள்ளலாம்; அதன் துணையுடன் அரசு அமைப்பதாகவே பிரசாரம் செய்யலாம்.

தி.மு.க., அ.தி.மு.கவின் அரசியல் போக்கு பிடிக்காமல் சலித்துப் போயிருக்கிற தமிழக மக்களுக்கும் இந்த மாற்றுக் கூட்டணி வரவேற்கத்தக்கதாகத் தோன்றும்.

ஆனால் ஒன்று, தி.மு.க.வில் குடும்பச் சண்டை, அ.தி.மு.க.வில் ஜெயலலிதாவின் ஏகபோகம், காங்கிரஸில் உட்கட்சிப் பூசல் என்று நிலவுவது போல் மிகப் பெரிய குறைபாடுகள் தமது கட்சியிலும் ஏற்பட விஜயகாந்த் அனுமதிக்கக்கூடாது; "ஊழலை இரவோடு இரவாக ஒழிக்க முடியாது" என்று பின்வாங்கவும் கூடாது.

"நேர்மையான ஆட்சி, தகுந்த அதிகாரிகளைக் கொண்டு தரும் சிறந்த நிர்வாகம்" என்பவை தேர்தல் வாக்குறுதிகளாக வழங்கப்பட்டால், அனுபவமற்ற நடிகருக்கு வோட்டுப் போட யோசிப்போர் கூட ஆதரவு நிலைக்கு மாற வாய்ப்பு இருக்கிறது. இலவச அரசியல் என்னும் நச்சுக் காற்றால் மாசுபட்டுள்ள தமிழகத்தில் புத்துணர்ச்சித் தென்றல் வீசும். தங்கபாலு ஏற்கெனவே விஜயகாந்துடன் கைகோப்பது குறித்து ஆர்வம் காட்டியிருக்கிறார். ராகுல் காந்தியும் சிந்திக்க வேண்டும். ○

# பந்தயம்

ஒரு 'லூச்சா'வுக்கும் ஒரு 'பச்சா'வுக்கும் இடையில் 'ஜெயிக்கப் போவது யாரு?' பாணியில் நடக்கும் பந்தயம்தான் கதை.

'லூச்சா'வாக பிரகாஷ்ராஜ்; 'பச்சா'வாக நிதின் சத்யா.

அதென்ன லூச்சா... பச்சா? 'லூச்சா'ன்னா ரௌடி; 'பச்சா'ன்னா சாமான்யன்.

(உபயம்: இயக்குநர் எஸ்.ஏ.சந்திரசேகர் சினிமா டிக்ஷனரி)

விஜய் போன்ற பெரிய ஹீரோவுக்கான கதையில் நிதின் சத்யாவை நடிக்க வைத்ததே பெரிய விஷயம். அதுவும் பிரகாஷ்ராஜுக்கு எதிராக 'ஹீரோ' பாத்திரம் வேறு. மனிதர் அசத்த வேண்டாமா...? ஆடுகிறார்... பாடுகிறார்... அடிக்கிறார்... துடிக்கிறார்... பிறகு அடங்குகிறார். ஒரே ஆறுதல் அவரை ஸ்டூடண்ட் கதாபாத்திரத்தில் நடிக்க வைத்திருப்பதுதான்.

நடிப்பு ஆக்ருதி கொண்ட பிரகாஷ்ராஜுக்கு 'குழந்தை', 'குழந்தை' என்று குழைந்துகொண்டே கொல்லும் வேடம். ஆனால், நிதின் சத்யாவுக்கு எதிராக அவர் நகர்த்தும் காய்கள் நசநசத்துப் போன பட்டாசு. 'அவ்ன் பன்னிரண்டு ரீல்ல நடிச்சட்டான்; நான் ரெண்டு ரீல்லயாவது நடிக்க வேண்டாமா?' என ஏங்குவது பிரகாஷ்ராஜ் மட்டுமல்ல; நாமும்தான்.

பிரகாஷ்ராஜ் மனைவியாக ராதிகா. தன் குடும்பத்தைக் கொன்றவனை, கட்டாயத் தாலி கட்டிய பாவத்துக்காக கணவனாக ஏற்றுக்கொள்வது 'கிக்லி பிக்லி' தனம். எல்லா அண்ணிகளும் செய்வதுபோல ஹீரோயின் காதலுக்கு உதவுகிறார். க்ளைமாக்ஸை நிர்ணயிப்பதே அவர்தான் என்பது மட்டும் ஆறுதல். நீண்ட நாட்களுக்குப் பிறகு ஹீரோயினாக சிந்து துலானி. படத்தின் கதை முழுக்க அவரைச் சுற்றித்தான் நகருகிறது. என்றாலும் அவருக்கு நடிக்க வாய்ப்பில்லாததுதான் பெருத்த சோகம். விஜய் வரும் காட்சிகள் படத்தின் விறுவிறு டாப் கியரில் எகிறுகின்றன. ஸ்ரீனிவாஸ் தேவாம்சத்தின் ஒளிப்பதிவு, விஜய் ஆண்டனியின் இசை 'பந்தயம்' போட்டு ஜெயிக்கின்றன. ரீமிக்ஸில் வந்திருக்கும் 'சுராங்கனி' பாடல், இனி மியூஸிக் சேனல்களைச் சுற்றி வரும். அதற்கு கொரியோகிராஃபி கோணல்மாணல் ஆனது ஏன்?

'நிதின் சத்யா' போன்ற சின்ன ஹீரோவைப் போட்டு, விஜய் போன்ற பெரிய ஹீரோக்கள் நடிக்க வேண்டிய படத்தைக் கொடுத்த இயக்குநர் எஸ்.ஏ.சந்திரசேகரின் தைரியம்தான் படத்தின் உண்மையான ஹீரோ.

பந்தயம் - அக்மார்க் முத்திரை குத்தப்பட்ட அலுமினியம்.

– மகிமைராஜன்



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை. பழைய பெருங்களத்தூர்.
(வழி) தாம்பரம். சென்னை - 63. போன் : 22760612, 22762299
City Office No.7, முதல் மாடி. வேலு தெரு. மேற்கு மாம்பலம்.
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை - 600 033. போன் : 23714942



## தீபாவளி நல்வாழ்த்துக்கள்



## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 19 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய் தந்தையற்ற திக்கற்ற, மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன் நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர், ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | |
|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. 1,000/- |
| • மதிய உணவு | ரூ. 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. 2,00,000/- |

**நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு**

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில் /வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை ஸ்ரீ சாரதா சக்தி பீடம் என்ற பெயருக்கு Cheque / DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம். மேலும் எங்களிடமிருந்து ரசீதைப் பெற்றுக் கொள்வது அவசியம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்
நிர்வாகம்.

# அழகின் வடிவே... அருளின் வடிவே...

# 10

# மாதொரு

பரம்பொருள் ஒன்றே ஆனாலும் காரிய நிமித்தம் அது பலவாய் தோன்றுகிறது. மலர், அரும்பாக இருக்கும்போதும் மலராய் மலரும்போதும், ஒன்று பலவாய் விரிவதை உதாரணம் சொல்கிறார் அபிராமிபட்டர். சிவம் என்றும் சக்தி என்றும் தனித் தனி தெய்வ வடிவாய்க் காணும் பொருள், சிவசக்தி ஐக்கியத்தில் ஒன்றே என்னும் தத்துவத்தை உணர்த்த வந்த வடிவமே அர்த்த நாரீஸ்வர வடிவம். இந்த வடிவத்தில் வலப்பாகத்தில் சிவபெருமானும் இடப்பாகத்தில் அம்பிகையும் விளங்குகின்றனர்.

இப்படிப்பட்ட ஒரு வடிவம் தோன்றக் காரணம் என்ன என்று பார்ப்போம். பிருங்கி என்றொரு முனிவர்; தீவிரமான சிவபக்தர். அவருக்கு அம்பிகை கூட ஒரு பொருட்டில்லை. சிவனைத் தவிர வேறு யாரையும் வணங்கமாட்டாராம்! தினமும் ஒரு வண்டின் உருவில் கைலாசத்தை அடைந்து சிவபெருமானை மட்டும் வலம் வந்து வணங்கித் திரும்புவாராம். சிவமும் சக்தியும் ஒன்றே என்ற தத்துவத்தை அவருக்கு உணர்த்த வேண்டி, பெருமான் தன் உடலில் ஒரு பாதியை அம்பிகைக்குத் தந்து அர்த்தநாரியாகக் காட்சி அளித்தாராம். சிவனை மட்டும் வலம் வருவது சாத்தியமில்லாது போயிற்று! (அர்த்தம் : பாதி; நாரி : பெண்) (இது நிகழ்ந்த இடம் இமயமலையில் உள்ள கௌரி குண்டம் என்னும் தலம். இது கேதார்நாத் செல்லும் பாதையில் அமைந்துள்ளது.)

தெய்வத்தமிழ் இந்த அர்த்த நாரீசுவர வடிவைப் போற்றியும், துதித்தும், வர்ணித்தும், புகழ்ந்தும், நையாண்டி செய்தும் தன்னில் பல வளங்களைச் சேர்த்துக் கொண்டது. தென்னாட்டுக் கலைஞர்கள் அர்த்தநாரீசுவர வடிவைக் கல்லிலும் செம்பிலும் வடித்து, அழியாப்புகழ் தேடிக் கொண்டார்கள்.

சிவனுடைய வடிவுக்கும் சக்தியினுடைய வடிவுக்கும் உள்ள முரண்பாடுகளை ஆதிசங்கரர், அழகான சுலோகம் ஒன்றில் பட்டியல் போடுகிறார்.

செண்பகமலர் போன்ற இளஞ்சிவப்பு நிறத்தவள் அம்பிகை. பெருமானோ கற்பூரம் போன்ற வெளுத்த திருமேனி உடையவர். அம்பிகைக்குக் கருங்குவளை ஒத்த விழிகள். பெருமான் செந்தாமரைக் கண்ணன். அழகிய பட்டாடை உடுத்தி பல்வேறு அணிகலன்களையும் அணிந்து, மணம் மிக்க மந்தார மாலையைச் சூடியிருக்கிறாள் அம்பிகை. பெருமானோ புலித் தோல் ஆடை உடுத்தி, பாம்புகளை ஆபரணமாக அணிந்து விளங்குகிறான். கஸ்தூரி, குங்குமம் போன்ற வாசனைத் திரவியங்களை அம்பிகை அணிந்திருக்க, பெருமானோ மயானத்துச் சாம்பலை உடல் முழுதும் பூசிக்கொண்டு நிற்கிறான். கருமேகம் போன்ற கூந்தலை அழகாகப் பின்னி முடித்திருக்கிறாள் அம்பிகை. கட்டுக்கடங்காமல் செம்புச் சுருளாய் விளங்கும் ஜடாபாரத்தைக் கொண்டிருக்கிறான் பெருமான். புறத்தோற்றத்தில் இவ்வளவு வித்தியாசம் என்றால் அவர்கள் செயலிலும் அல்லவா முரண்பாடு! ஐயாவுக்கோ அழிப்பதே தொழில். அம்மாவுக்கோ அழித்ததை மீண்டும்

உயிர்ப்பித்தும், காத்து ரக்ஷிப்பதுமே சுபாவம்! ஐயன் எரித்து சாம்பலாக்கிய மன்மதனை 'உனக்கு நான் இருக்கிறேன்' என்றல்லவோ பரிந்து கொண்டு வந்து மீண்டும் உயிர்ப்பித்தார் என்று போற்றித் துதிக்கிறார் ஆதிசங்கரர். சுபாவத்தில் முரண்பாடு உள்ள தம்பதிகள் ஒரு வீட்டில், ஒன்றாய் வாழ்ந்து, குடும்பம் நடத்துவதே கஷ்டமாயிருக்கும்போது இவர்கள் ஒரே உருவத்தில் அல்லவா இணைந்திருக்கிறார்கள்!

இத்தனை முரண்பாடுகள் உள்ள ஒரு வடிவை எழுத்தில் வடிப்பது போல்

# பாகன்



கி. ஸ்ரீ நீலகண்டன்

சிற்பங்களிலும் செப்புத்திருமேனிகளிலும் வடிப்பது அவ்வளவு எளிதல்ல! அர்த்தநாரீசுவர வடிவத்தைக் கண்டால் கொஞ்சம் நின்று நிதானமாகப் பாருங்கள்.

இந்த வடிவத்தில் சிவனுக்குரியது வலது பக்கம். அம்பிகைக்குரியது இடப்பாகம். சிவனுக்குரிய நான்கு திருக்கரங்களில் இரண்டு வலது பாகத்திலும் அம்பிகைக்குரிய இரு திருக்கரங்களில் ஒன்று இடதுபாகத்திலும், ஆக, மூன்று திருக்கரங்களை உடையது இந்த வடிவம். வலது மேற்கரம் மழுவை ஏந்தியிருக்க, கீழ்க்கரம், சிலைக்குப் பின்புறமிருந்து தலையை நீட்டும் ரிஷபத்தின் தலையைத் தடவிக் கொடுத்தவாறு அமைந்திருக்கும். அம்பிகைக்கு உரிய இடதுகரம் மலர் ஒன்றை நளினமாக ஏந்தியவாறு விளங்கும். (சில வடிவங்களில் கையைத் தொங்கவிட்டவாறும் காணலாம்.)

வலது பாகம் கம்பீரமாக நிமிர்ந்து விளங்க, இடதுபாகம் ''த்ரிபங்கி'' என்னும் மூன்று குழைவுகளை அங்கத்தில் கொண்டுள்ளது.

வலது பாதம் அழுத்தமாக ஊன்றியிருக்கையில், இடது பாதத்தில் அவ்வளவு அழுத்தம் இல்லை. இடுப்பிலிருந்து பாதம் வரை விளங்கும் தொடை, முழந்தாள், கணைக்கால் ஆகிய அங்கங்களில் வலதுபுறம் உறுதிபடவும் இடப்புறம் ஒய்யாரமாகவும் விளங்குகின்றன. இடப்புற இடையில் உள்ள குழைவு வலதுபுறத்தில் இல்லை. வலது தோளில் காணப்படும் அழுத்தம் இடது தோளில் இல்லை. வலது திருச்செவியை மகரக் குழையும் இடது திருச்செவியை அழகிய தோடும் அணிசெய்கின்றன. முக பாவத்திலும் ஆண் - பெண் மாறுபாட்டையும், ஆணுக்கும் பெண்ணுக்கும் உள்ள உருவ வேற்றுமையையும் நூல் பிடித்துக் காட்டி விடுகிறது அர்த்தநாரீசுவர வடிவம்.

சிலப்பதிகாரத்தில் ஒரு காட்சியில், நடனமாடும் கலைஞன் ஒருவன் அர்த்தநாரீசுவர வேடம் தரித்து ஆடுகையில் இந்த இயல்பான வேறுபாட்டை நுணுக்கமாக அபிநயம் பிடித்தானாம். திருஞானசம்பந்தரின் முதல் தேவாரம், ''தோடுடைய செவியன்'' என்றே தொடங்குகிறது. சிவனைப் பாட அடியெடுத்த போது அம்பிகையின் காதில் உள்ள தோடுதான் அவர் கண்ணுக்குப் புலப்படுகிறது போலும். சிவாலயங்களில் உள்ள சிவ வடிவங்களில் அர்த்தநாரீசுவரராக அமையாத கோலங்களில் கூட வலது செவியில் மகரக் குழையும் இடது திருச்செவியில் தோடும் விளங்குகின்றன.



**சுபாவத்தில் முரண்பாடு உள்ள தம்பதிகள் ஒரு வீட்டில், ஒன்றாய் வாழ்ந்து குடும்பம் நடத்துவதே கஷ்டமாயிருக்கும்போது இவர்கள் ஒரே உருவத்தில் அல்லவா இணைந்திருக்கிறார்கள்!**

வித்தியாசம் நிழலாடுகிறது. விழிகளும் நாசியும் அதரமும் கன்னங்களும் கூட வெவ்வேறு பாவங்களைக் காட்டுகின்றன. சிரஸில் வலது பாகத்தில் ஜடாமகுடமும் இடது பாகத்தில் அழகிய கிரீடமும் விளங்குகிறது. வலது திருமேனியில் நாகாபரணம், ருத்திராட்சம் ஆகியவை விளங்க, இடதுபுறத் திருமேனியை பலவித ஆபரணங்கள் அழகு செய்கின்றன. மொத்தத்தில் சிவனுக்கும் சக்திக்கும் உள்ள இயல்பு நன. ஐந்தொழில்களில் அநுக்கிரக சக்தியாகப் பேசப்படும் நடராஜப் பெருமானின் தூக்கிய திருவடி இடது திருவடியே! அது அம்பிகையின் திருவடி. அநுக்கிரகம் செய்யும் போது முந்திக் கொண்டுவரும் இடது திருவடி, நிக்கிரகம் (தண்டித்தல் அல்லது அழித்தல்) என்று வரும்போது ஒதுங்கிக் கொண்டு விடுகிறது. கஜசம்ஹார வடிவத்தில் இடதுபாதம் இப்படித்தானே இருக்கிறது!

''உமையும் உமையொருபாகனும் ஏக உருவில் வந்து
எமையும் தமக்கன்பு செய்யவைத்தார்''
- அபிராமி அந்தாதி

பிருங்கிமுனிவரின் பேதைமையால் கலை உலகம் பெற்ற அரிய பொக்கிஷம் அர்த்தநாரீசுவர வடிவம்.

(பெருகும்)

**Estd. 1989** ஸ்ரீசுந்தர விநாயகர் துணை உ தேவதானப்பட்டி ஸ்ரீ காமாட்சி அம்மன் துணை

காலை காபி, 3 வேளை சைவ உணவு, தங்கும் வசதி, தினசரி ஒரு லிட்டர் மினரல் வாட்டர் 3 Tier இரயில் சுற்றுலாக்கள்.

22-10-08 **(தீபாவளி சுற்றுலா)** & 19-11-08 முதல் : **10** நாட்கள்
டெல்லி–திரிவேணி–காசி–சாரணாத்–வியாசகாசி–கயா–புத்தகயா–கல்கத்தா **ரூ. 4600**

★ இத்துடன் டெல்லி–பூரி–புவனேஸ்வர்–கோனார்க் உள்பட – 11 நாட்கள் **ரூ. 4990**

★ இத்துடன் ஆக்ரா–மதுரா–அமிர்தசரஸ்–வாகாபார்டர்–ஹரித்துவார்–ரிஷிகேஷ் உள்பட – 14 நாட்கள் **ரூ. 6490**

16-10-08 மற்றும் 16-11-08 முதல் 13 நாட்கள் மதுரா–ஆக்ரா–பிருந்தாவன்–டெல்லி–ஹரித்துவார்–ரிஷிகேஷ்–**பத்ரிநாத்-கேதார்நாத்** **ரூ. 6400**

★ இத்துடன் திரிவேணி–காசி–கயா–கல்கத்தா–பூரி–புவனேஸ்வர்–கோனார்க் உள்பட – 17 நாட்கள் **ரூ. 8200**

19-10-08 மற்றும் 14-11-08 முதல் 12 நாட்கள் : மதுரா–ஆக்ரா–பிருந்தாவன்
டெல்லி–குருக்ஷேத்திரம்–சண்டிகார்–**சிம்லா-குப்ரி-மணிக்கரன்-குலு-மணாலி**- ரோத்தங்பாஸ்–வசிஷ்டாபாத் **ரூ. 6590**

★ இத்துடன் அமிர்தசரஸ்–வாகாபார்டர்–**ஜம்மு–வைஷ்ணவதேவி** உள்பட 16 நாட்கள் **ரூ. 7990**

16-10-08 முதல் 16 நாட்கள் : டெல்லி–ஹரித்துவார்–ரிஷிகேஷ்–பத்ரிநாத்– கேதார்நாத்–கங்கோத்ரி–யமுனோத்ரி **ரூ. 9200**

**15-10-08 & 15-11-08 & 15-12-08 & 26-12-08** முதல் கப்பல் மற்றும் விமானம் மூலம்
அந்தமான் சுற்றுலா சைவ உணவு மற்றும் தங்கும் வசதியுடன் சுற்றுலா

மூணாறு, ஊட்டி, கைலாஷ், நேப்பாள், இலங்கை, சிங்கப்பூர், மலேசியா சுற்றுலாக்களுக்கு அணுகவும்

அனைத்து சுற்றுலாத்தலங்களுக்கும் சென்றுவர DVD வசதியுடன் கூடிய A/c மற்றும் Non A/c கார், வேன், மினி பஸ் வாடகைக்கு கிடைக்கும்.

* L.T.C. ரசீது தரப்படும். II Tier A/c & III Tier A/c சுற்றுலா உண்டு

# சன் டிராவல்ஸ்

Prop. K. சிதம்பரம், B.Sc., B.Ed.,
செல் : 98421 - 56668

**மதுரை :** 3, தெற்கு மாசி வீதி, T.M. கோர்ட் (நரசுஸ் காபி எதிரில்) மதுரை – 1. போன் : 2341133

**சென்னை :** 30, நடேசன் தெரு, (சிவா–விஷ்ணு ஆலயம் அருகில்) T. நகர், சென்னை–17. போன் : 24359194, செல் : 93645-59194

**திருப்பூர் :** J.R. சந்திரசேகர், C-32, சேரன் நகர், சினி பார்க் தியேட்டர் ரோடு, திருப்பூர்–6. செல் : 93446 10317

**கும்பகோணம் :** பிரசாத் போட்டோ ஸ்டுடியோ, 13-B, கோதண்டபாணி தெரு, கும்பகோணம். போன் : 0435 - 2433550



## வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்.

*அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப்*
*ஸ்ரீ கோவிந்த தீக்ஷித புண்யஸ்மரண ஸமிதி* (Regd.)

**"ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகாஸ்தானம்"**

29-30, East Iyen Street, KUMBAKONAM, Thanjavur Dt. Tamil Nadu -612 001. India.
E-mail : rajavedapatasala@dataone.in, vedagdps@sancharnet.in
Website : www.rajapatasala.in

☎ Off : (0435)
2425948
2401789
Patasala :
2401788
2422866

"வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். ஒரு வேதக் குழந்தையின் படிப்பு பராமரிப்பு செலவை ஒரு குடும்பம் எடுத்துக்கொண்டால், பேருபகாரமாக இருக்கும்" என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் மூதாதயர்களான ஸ்ரீ நாகமாம்பா ஸமேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 466 ஆண்டுகளாக நடந்துவரும் ராஜா வேத காவ்ய பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 215 மாணவர்களுக்கு 19 வேத, சாஸ்திர அத்யாபகர்கள் புராதனமான குருகுல முறைப்படி ரிக் வேதம், கிருஷ்ண, சுக்ல யஜுர் வேதம், ஸாம வேதத்தை போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்குகொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம். புதிய பாடசாலை கட்டிடம் **ஸ்ரீ கோவிந்த தீக்ஷித கடிகா ஸ்தானம்** என பெயரிடப்பட்டு 21-6-2004 திங்கள்கிழமை *ஸ்ரீ காஞ்சி காமகோடி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் திறந்து வைத்து வேத அபிவிருத்திக்கு அர்ப்பணித்தார்.*

| தங்கள் கடிதத்தில் தங்கள் போன் (with STD Code)/மொபைல் எண்ணை குறிப்பிடும் படி கேட்டுக்கொள்கிறோம். நன்கொடை திட்ட விபரங்கள் | நன்கொடை தொகை | நிரந்தர வைப்பு நிதி *Corpus Fund |
|---|---|---|
| ஒரு வேளை ஸமாராதனைக்கு (பகுதி தொகை) | Rs. 700/- | Rs. 8,000/- |
| அமாவாஸ்யை (or) பௌர்ணமி (or) க்ருஷ்ண (or) சுக்ல பக்ஷ த்வாதசி ஒரு ஸமாராதனைக்கு [Please choose one specific day of a particular month in a year for Samaradhana] | Rs. 2,000/- | Rs. 25,000/- |
| வேதம் பயிலும் ஒரு மாணவனின் பராமரிப்பு ஒரு மாத செலவு ரூ.1000/- | Rs. 12,000 P.A | Rs.1,30,000/- |

நன்கொடைக்கான தொகையை Cross செய்யப்பட்ட D.D./Cheque-ஐ A.V.M.S.G.D.P.S. Samithi என்ற பெயரில் அனுப்பக் கோருகிறோம்.

கிருஷ்ண யஜுர் வேத அத்யாபகர்கள் விண்ணப்பிக்கவும்.



* கபில்தேவ்

இந்த வாரம், சம்பந்திய கிரிக்கெட் நிலவரங்களை, கேள்வி - பதில் பாணியிலேயே பார்த்துவிடுவோம்.

**இந்தியா - ஆஸ்திரேலியா டெஸ்ட் தொடரில் ஏன் ஒரு மேட்ச் கூட சென்னைக்குக் கிடைக்கவில்லை?**

தமிழ்நாடு கிரிக்கெட் வாரியம் பார்ப்பதற்கு பலம்பொருந்திய அமைப்பாக இருந்தாலும், செயல்பாடுகளில் அது சொல்லிக்கொள்ளும்படியாக இல்லை. எந்த அணி இந்தியாவுக்கு விஜயம் செய்தாலும் பெங்களூருக்கும் மொகலிக்கும் தவறாமல் ஆட்டங்கள் கிடைக்கின்றன. மழையைக் காரணம் காட்டியே சென்னைக்கு முக்கியமான டெஸ்ட் ஆட்டங்கள் மறுக்கப்பட்டு வருவது, ரசிகர்களுக்கு இழைக்கப்படும் துரோகமாகும். பி.சி.சி.ஐ. மீதும் குற்றம் இருக்கிறது. முக்கியமான டெஸ்ட் தொடர்களின்போது பாரம்பரியம் மிக்க மைதானங்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படவேண்டும். இந்த நிலையில் சென்னையில் ஊருக்கு ஒதுக்குப்புறமாக இன்னொரு கிரிக்கெட் ஸ்டேடியம் உலகத் தரத்தில் கட்டப்பட்டு வருகிறது. ஒன்றும் சொல்வதற்கில்லை.

**ஆண்ட்ரு சிமெண்ட்ஸ் பிரச்னை எதை உணர்த்துகிறது?**

ஒழுங்கீனம் தொடர்பாக வீரர்கள் தண்டிக்கப்படுவது நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டு வருகிறது. பாகிஸ்தானுக்கு சோயிப் அக்தர், முகமது ஆசிஃப், அஃப்ரிடி; இந்தியாவுக்கு ஹர்பஜன் சிங், ஸ்ரீசாந்த்; ஆஸ்திரேலியாவுக்கு சிமெண்ட்ஸ், ஹேடன் என்று இந்தக் கலேபரக்காரர்களின் கூட்டம் பெருகி வருவது ஆபத்தானது. பாகிஸ்தானுடனான ஒரு மேட்சில், கவுதம் கம்பீர் நேருக்கு நேர் பவுலருடன் மோதி தன் சீற்றத்தை வெளிக்காட்டினார். வீரர்களின் திறமைக்குப் பயந்து ஆரம்பத்தில் சலுகை காட்டப்படும்போது, அதுவே பிறகு அவர்கள் வாலாட்ட காரணமாக அமைந்துவிடுகிறது. இதற்கு ஹர்பஜனையும் சிமெண்ட்ஸையும் விடச் சிறந்த உதாரணங்கள் வேறெதுவும் தேவையில்லை. சிமெண்ட்ஸ் விஷயத்தில் பல அநியாயங்கள் நடந்துள்ளன என்று முன்னாள் ஆஸ்திரேலிய வீரர் டீன் ஜோன்ஸ் பொங்கியுள்ளார். நல்லவேளை, ஹர்பஜன் நிம்மதியாக விளையாடுவார். கேப்டன் ஆவதற்கு முன்னால் ஒருமுறை கூட மேட்ச் ரெஃப்ரி முன்னால் கைகட்டி நிற்காத அனில்கும்ப்ளேவின் குணங்களைப் பாடமாகவே பயிலலாம்.

**பத்ரிநாத்துக்கு டெஸ்ட் தொடரில் ஆட வாய்ப்பு கிடைக்குமா?**

நம் தமிழ்நாட்டைச் சேர்ந்த ஒரு வீரருக்கு வாய்ப்பு நல்கவேண்டும் என்று எண்ணுவதைவிட, திறமையான வீரர் யாராக இருந்தாலும் அவருக்கு இந்திய அணியில் இடமளிக்க வேண்டும் என்று ஆசைப்படுவோம். அதே சமயம், இரண்டு ஆண்டுகளுக்கு முன்பே கவுதம் கம்பீரோடு

இந்திய அணியில் இடம்பிடித்திருக்க வேண்டியவர் பத்ரிநாத். வினோதமாகப் பார்க்கப்படுகிறார்; வியக்கப்படுகிறார்; அதே சமயம் அவர் புறக்கணிக்கவும் படுகிறார். கிளப் கிரிக்கெட்டிலிருந்து ஆரம்பித்து ரஞ்சி டிராபி, இந்தியா 'ஏ' என்று பத்ரிநாத் சாதித்துக் காண்பிக்காத போட்டிகள் என்று எதுவும் இல்லை. திராவிடுக்கு இணையான திறமை வாய்க்கப் பெற்றாலும் பெரிய வாய்ப்பு எதுவும் கிடைக்காமல் போன தமிழக வீரர் ஷரத் போல


* பத்ரிநாத்

# பத்ரிநாத்துக்கு வாய்ப்பா?

பத்ரிநாத்தின் நிலைமை ஆகிவிடக் கூடாது.

**கபில்தேவின் ஐ.சி.எல். வீரர்களுக்கு விதித்திருந்த தடையை ஸ்ரீலங்கா நீக்கி விட்டதே?**



கிரிக்கெட் வரலாற்றில் இது ஒரு முக்கியமான முடிவு. பழைய காலனி ஆதிக்க அடிமை மனோபாவத்தைக் கொண்ட ஓர் அமைப்பு பி.சி.சி.ஐ. மிகக் கேவலமான முறையில், ஐ.சி.எல்-லுக்குச் சென்ற ரஞ்சி வீரர்களின் சம்பள பாக்கியைத் தராமல் இழுத்தடித்தது. எதிர் அணியில் ஒரு ஐ.சி.எல். வீரர் இருந்தால்கூட இந்தியக் கிரிக்கெட் வீரர்கள் மட்டுமல்லாமல், இதர நாட்டு வீரர்களும் அவர்களோடு போட்டியில் பங்கேற்கக்கூடாது என்று சண்டித்தனம் செய்துவந்தது. நிகழ்காலமே திருடப்பட்டுவிட்ட நிலையில் ரணதுங்காவின் ஆலோசனையில் துணிச்சலான முடிவொன்றை ஸ்ரீலங்கா வாரியம் எடுத்துள்ளது. ஐ.சி.எல். வீரர்களுக்கு இதுவரை 20-20 ஆட்டத்தில் ஆட மட்டுமே வாய்ப்பு அளிக்கப்பட்டது. இனி அவர்கள் ஐந்து நாள் ஆட்டங்கள் ஆடலாம். ஐ.சி.எல்-லில் உள்ள இலங்கை வீரர் அட்டபட்டு ஒருவேளை நாளை மீண்டும் ஸ்ரீலங்கா அணியில் சேர்க்கப்பட்டால், அப்போது பி.சி.சி.ஐ. சிண்டைப் பிய்த்துக்கொள்ளும். ●

**ச.ந.கண்ணன்**

## அருணா சரண்யா

ஷிப்ராவுக்கு அனுப்பப்பட்டிருந்த கடிதத்தின் வாசகங்கள் - கடைசி வரியைத் தவிர - இப்போது தெளிவாகவே விளங்கின. காரணம் பவித்ரா இருபது முறை அந்த வரிகளை படித்ததுதான். ஆனால் ஐம்பது முறை உற்றுப் பார்த்தும், அந்தக் கடிதம் எங்கிருந்து அனுப்பப்பட்டது என்பது விளங்கவில்லை. முத்திரையின் மசி பரவி எந்த அலுவலகத்தில் அது போஸ்ட் செய்யப்பட்டது என்பதை அறியவிடாமல் செய்திருந்தது.

ஆனால், இந்த ரகசியம் வேறொரு வடிவத்தில் அவளுக்கு விரைவிலேயே விளங்கியது.

''சரி செய்தாச்சு. இப்ப எல்லாம் பக்காவா இருக்கு'' என்றபடி ஷிப்ராவின் செல்ஃபோனை நீட்டினார் கடைக்காரர்.

பரபரக்கும் மனத்தைக் கட்டுப்படுத்திக்கொண்டு, ரிப்பேருக்கான தொகையைக் கொடுத்துவிட்டு, வழியில் அந்தச் செல்ஃபோனைப் பயன்படுத்தக்கூடாது என்ற முடிவுடன் (கண்காணிக்கப்படக் கூடும்!) வீட்டுக்கு வந்து சேர்ந்தாள்.

செல்ஃபோனை உயிர்ப்பித்தாள். 'வந்த அழைப்புகள்' என்ற தகவல் பட்டியலை நாடினாள். கடைசியாக வந்திருந்தது ஒரு எண். யாராக இருக்கும் என யோசித்த போதே வேறொரு தகவலும் அவள் மனத்தில் பதிந்தது. பவித்ராவின் பெரியப்பா டெல்லியில் இருப்பவர். அவரது 'லாண்ட் லைனி'லிருந்து தொலைபேசியில் பதிவாகும் அதே தொடக்க எண்கள் இதிலும் காணப்பட்டன. எந்த இடத்திலிருந்து அழைப்பு வருகிறது என்பதற்கான எண் குறியீடு அது. 'டெல்லி பெரியப்பா'. ஆக டெல்லியிலிருந்த ஒருவருடன்தான் ஷிப்ரா இறுதியாகப் பேசியிருக்கிறாள். யாராக இருக்கும்?

சட்டென அவள் மனம் ஷிப்ராவுக்கு வந்த கடித வாசகங்களுக்குத் தாவியது.

'பூவே மாதம்'. முதலில் தமிழ் மாதங்களையெல்லாம் மனத்தில் கொண்டு வந்தாள். 'மார்கழிப் பூவே' பாடல் நினைவுக்கு வந்தது. ஆனால் திருப்திகரமாக இல்லை. மேலும் யோசித்தாள் ஒருவேளை... ஆங்கில மாதங்களோ? இப்படி எண்ணிய அடுத்த நிமிடமே அவளுக்கு விடை தெரிந்துவிட்டது. டிசம்பர்! அதே பெயரில் மாதமும் உண்டு, மலரும் உண்டு. பூவே மாதம்.

'வெற்றிக்கான படிகள்'. நினைவை விட்டு அகலாத அந்த நேர்முகத் தேர்வு அவளுக்கு நினைவுக்கு வந்தது. அவளைத் தற்போதைய வேலையில் அமர்த்திய நேர்முகத் தேர்வு. 'எவ்வளவு

# நில்... கவனி... செல்! கொல்!

தொடர்கதை

10

படிகள் ஏறி வந்தாய்?' என்ற கேள்விக்கு 'அது நினைவில்லை. ஆனால் வெற்றிக்கான படிகள் ஏழு என்று நீங்கள் விளக்கியது மனத்தில் பதிந்துவிட்டது' என்பது போல் தான் பதிலளித்தது தெளிவாகத் தோன்றியது. ஆக, வெற்றிக்கான படிகள் என்பது 'ஏழு' என்பதை உணர்த்துகிறது.

''காகித ஓடம் கடலலை மீது'' படிக்கும்போதே பி. சுசீலாவின் இனிய குரல் அதே வார்த்தைகளில் தொடங்கும் திரைப்படப் பாடல் மனத்தில் ஒலித்தது.

மூன்றையும் இணைத்துப் பார்த்தாள். ''டிசம்பர் 7, சுசீலா.''

ஆக,லட்சுமி அல்ல. சுசீலா என்ற ஒருத்தி ஷிப்ராவுக்குக் கடிதம் எழுதி இருக்கிறாள், அவள் இறந்த விவரம் தெரியாமலேயே. கடிதத்தின் கடைசி வாசகம்தான் அவளுக்குப் புலப்படவில்லை. ''ராஜேந்திர - திலீப் - அஷோக்.''

இதென்ன? எதற்காக இந்த மூன்று பெயர்களை அந்த சுசீலா எழுதி இருக்க வேண்டும்? ஒருவேளை இந்த மூன்று பேரைக் குறித்து அந்த சுசீலா ஷிப்ராவுக்கு எதையாவது நினை




லூட்டுகிறாளா?

அப்போது அந்தப் பக்கமாக வந்த ஈஸ்வரன், ''ராமர் பெயரைச் சொன்னாலாவது புண்ணியம் உண்டு'' என்றார்.

'கடிதத்தின் கடைசி வாக்கியத்தை வாய்விட்டுக் கூறியிருக்கிறோம்' என்பதை உணர்ந்துகொண்ட பவித்ரா அப்பாவைப் பார்த்து அசட்டுச் சிரிப்பு ஒன்றை உதிர்த்தாள்.

போகிற போக்கில், ''ஏம்மா, உன் வயசுக்குத் தகுந்த மாதிரி தனுஷ், விஜய், அஜீத் இப்படி யார் பேரையாவது சொல்லக் கூடாதோ?'' என்று அவர் கூற, ''எதுக்காக சினிமா நடிகர்கள் பெயரையெல்லாம் நான் பட்டியல் போடணும்?'' என்றாள் பவித்ரா சிறிது கோபத்துடன்.

''பின்னே நீ சொல்லிக்கிட்டிருந்ததுக்கு வேற என்ன அர்த்தம்? ராஜேந்திரகுமார், திலீப் குமார், அஷோக் குமார் எல்லாரும் பிரபல ஹிந்தி நடிகர்கள்தானே?''

'அட...ஆமாம். இதை எப்படி மறந்தோம்?' என்று எண்ணியபோதே அந்த ஒற்றுமை பளிச்சென்று விளங்கியது. மூன்று பெயருக்கும் பொதுவாக விளங்கிய பகுதி - குமார். குருவின் இரட்டை சகோதரன், டெல்லியின் வசிப்பவன்.

பவித்ராவின் குழப்பம் மேலும் அதிகமானது. ஷிப்ராவுக்குக் குமார் கடிதம் எழுதியதில் அவ்வளவு வியப்பில்லை. ஏனென்றால் அவள் இறந்ததே அவனுக்குத் தெரியாது. ஆனால் எதற்காக இந்தப் புதிர்?

மதிய வேளையாகப் பார்த்து ஷிப்ராவின் வீட்டுக்கு மீண்டும் செல்லவேண்டும் என்று முடிவு செய்தாள் பவித்ரா. அப்போது நிச்சயம் குரு வீட்டில் இருக்க வாய்ப்பில்லை.

''**வா**ம்மா. நீ வந்ததிலே எனக்கு ரொம்ப சந்தோஷம். நானும் பேச்சுத் துணைக்கு ஆளில்லாமல் தவிக்கிறேன்'' என்றபடி மனப்பூர்வமாக வரவேற்றாள் குருவின் அம்மா.

''ஏன், அங்கிள் வீட்ல இல்



''போருக்குப் புறப்படும்போது மன்னர் ஏன் இப்படி நடுநடுங்குகிறார்?''

''இந்தத் தடவையும் 'ஓடி' வந்தா்னா டைவர்ஸ் நோட்டீஸ் விட்ருவோம்னு பதினெட்டு ராணிகளும் கறாரா சொல்லிட்டாங்களாமே!''

- பி.ஜி.பி. இசக்கி



# MPL CHARITABLE FOUNDATION

A Place of Peace and Harmony for Senior Citizens

## Our Home ready for Occupation

- At Kuttalam on the state highway between Mayavaram & Kumbakonam.
- Quality vegetarian food at subsidised rates.
- Furnished rooms.
- Copious water from cauvery.
- Medical assistance with ambulance van.
- Yoga / Meditation centre.
- Home Theatre / Internet cafe.
- Closer to railway station & bus terminus.
- **NO DEPOSITS**
- Periodical tour for the inmates for various temples in and around the place.



Only deserving senior citizens will be admitted on first come first serve basis at the sole discretion of the trustees of the foundation

For more details please contact:

Mr. T. Krishnaswamy 98409 29595
Mr. T.L. Shankaran - 98409 86207
Mr. S. Gauthama Sankar - 98409 34111

No. 6, Raja Mela Salai, Kuttalam
Nagai District. Pin - 619 801
E-mail: mplelders@yahoo.co.in


லையா?''

''அதென்னமோ தெரியல்லே. ரெண்டு மாசமாவே மதியம் ரெண்டு மணி நேரத்துக்காவது வெளியே போயிடறார். கேட்டா சுந்தரம்கிற சிநேகிதர் வீட்டுக்குப் போறேன்னு சொல்றார்.''

பவித்ராவின் மனத்தில் ஏனோவொரு நெருடல் ஏற்பட்டது.

''ஆன்ட்டி, உங்களுக்கு ஞாபக சக்தி ரொம்ப அதிகமாமே. ஷிப்ரா சொல்லியிருக்கா...''

அந்த அம்மாளின் முகம் மலர்ந்தது. ''அப்படியா சொன்னா? பாவம் சின்ன வயசிலேயே போய்ச் சேர்ந்துட்டா.''

பவித்ரா வருத்தத்தை விழுங்கிக்கொண்டு தொடர்ந்தாள். ''டிசம்பர் ஒண்ணாம்தேதி என்ன விசேஷம் சொல்லுங்க பார்க்கலாம்?''

சிறிது யோசித்தபின் விடை அளித்தாள் அந்த அம்மாள். ''அன்னைக்கு அடுத்த வீட்டு திலீப் போட எட்டாவது பிறந்தநாள்.''

''டிசம்பர் ஏழாம் தேதி.''

சட்டென பதில் வந்தது. ''அன்னைக்குத்தான் டெல்லியிலேர்ந்து குமார் இங்கே வந்திருந்தான்.''

**(இக்திக்)**

# "வாரிசு என்பது விசிட்டிங் கார்ட்"

"நான் நடிக்க வந்து பத்து ஆண்டுகள் ஆகிவிட்டன. ஆனாலும் பெயர் சொல்லும் நடிகராக நான் ரசிகர்களிடம் அறியப்படவில்லை. அந்தக் குறையை 'பூவா தலையா' போக்கிவிடும்."

கண்களில் நம்பிக்கை மின்னப் பேசுகிறார் உதயா.



★ நடிகர் உதயா

பூஜையோடு நின்ற படங்கள், ரிலீஸாகாத படங்கள்... என்று சினிமாவின் சங்கடங்கள் அனைத்தையும் சந்தித்த அனுபவம் அவர் முகத்தில் தென்பட்டது.

"உங்கள் அப்பா ஏ.எல். அழகப்பன்; தயாரிப்பாளர். தம்பி விஜய், 'கிரீடம்', 'பொய் சொல்லப் போறோம்' படங்களின் இயக்குனர். அப்படியிருந்தும் ஏன் தம்பியின் படத்திலேயே நடிக்கக் கூடாது?" என்று ஆரம்பித்தோம்.

"அது சரியில்லை. தம்பியின் முதல் படமே அஜீத் சார் நடித்த கிரீடம். அதனால், தம்பி அடுத்தடுத்து பெரிய ஹீரோக்களின் படத்தைப் பண்ணுவதுதான் சரி. நானும் பெரிய ஹீரோவாக அறியப்பட்ட பிறகே நடிக்க வேண்டும். அதற்காகவே காத்திருக்கிறேன்.

அது மட்டுமல்ல; 'சினிமாக்காரர்களின் வாரிசுகள் மட்டும்தான் நடிகர்களாக முடியும்' என்ற கருத்து ஏற்பட்டுள்ளது. இது மிகத் தவறானது. வாரிசு என்பது விசிட்டிங் கார்டு மாதிரி. ஆனால், திறமையும் உழைப்பும்தான் நடிகனாக நிலை நிறுத்தும். சூர்யா, விஜய்.. என்று ஒரு பட்டியலே சொல்லலாம்" என்ற உதயா தொடர்ந்து பேசினார் :

"சினிமாவின் சறுக்கல்களால் நான் வருந்தியது நிஜம்தான். ஆனால், நம்பிக்கையை இழந்துவிடவில்லை. காரணம், என்னுடைய ரோல் மாடல், நண்பர், விக்ரம்தான். அவருடைய போராட்டமும், வெற்றியும்தான் என்னுடைய உந்துசக்தி! அதனால்தான் இன்னமும் துடிப்போடு இருக்கிறேன்.

அதற்கான பரிசுதான், சஞ்சய்ராம் இயக்கத்தில் வரப்போகும் 'பூவா தலையா'. இதில் என்னுடைய கதாபாத்திரம் ஆன்டி ஹீரோதான். ஆனால், என்னை ரசிகர்களுக்கு மட்டுமல்ல; எனக்கும் அடையாளம் காட்டும் காரெக்டர். இந்த உழைப்பு நிச்சயம் ரசிகர்களிடம் என்னைக் கொண்டு சேர்க்கும்" - சொல்லும்போதே உதயாவின் குரலில் உறுதி தெறிக்கிறது. வெல்லுங்கள் உதயா. ஆல் தி பெஸ்ட்!

– ராகவ்குமார்

## லிப்கோ ஸ்தாபகர் சர்மாஜி நூற்றாண்டு வெளியீடுகள்!

பலரின் வேண்டுகோளுக்கிணங்க மஹாகவி காளிதாஸரின் மகத்தான இதிகாசம்
புதுப் பொலிவுடன் மீண்டும் வெளிவந்த பதிப்பு அமோக வரவேற்புடன் விற்றுத் தீர்ந்து
இப்போது அடுத்த பதிப்பு!

# ரகுவம்ச மஹா காவ்யம்




**ஸ்ரீ வே.ஸ்ரீ. வேங்கடராகவாச்சார்யர்**
எழுதிய ஒப்பற்ற நூல்!
ஸம்ஸ்க்ருத மூலம், பதவுரை, கருத்துரை, விளக்கவுரை
1216 பக்கங்கள்: விலை ரூ. 180
தபாலில் பெற ரூ. 200 M.O. / D.D. அனுப்புக.
இந்நூலைப் பற்றிய மதிப்புரைகளில் சில:

"The Tamil translation is lucid and expressive... The Publishers deserve congratulations."
- The Hindu, 19.8.2008

"ஸம்ஸ்க்ருதம் அறியாதவர்களும் இதன் காவியச் சுவையை எளிய தமிழில் அறியலாம்."
- ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியா, மே 2008



ஸ்ரீ அம்பாளின்
அநுக்ரஹத்தைப் பெற...
ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர்
இயற்றிய

### ஸ்ரீ கமலாம்பா நவாவரணக் கீர்த்தனைகளின் அற்புதப் பலன்கள்

(ஸம்ஸ்க்ருத, தமிழ் க்ருதிகளுடன்)

"நவரத்னமாலா" **M.K. வெங்கடராமன்**

ஸ்ரீ அம்பாளின் நவாவரண பூஜைகளின் மஹிமைகள்
ஒன்பது ஸ்ரீசக்ரப் படங்களுடன் பக்தி ரஸத்துடன்
எளிய முறையில் விளக்கப்பட்டுள்ளன.
ஸ்ரீ கமலாம்பா வண்ணப் படம் அட்டையை அலங்கரிக்கிறது.

விலை ரூ. **25**

ஸ்ரீ காமாக்ஷியின்
கடாக்ஷத்தைப் பெற...
ஊத்துக்காடு
ஸ்ரீ வேங்கடசுப்பையர்
இயற்றிய
ஸ்வதந்த்ர - யந்த்ர - மந்த்ர - நாதமயி

### ஸ்ரீ காமாக்ஷி நவாவரணக் கீர்த்தனைகள்

(ஸம்ஸ்க்ருத, தமிழ் க்ருதிகளுடன்)



"நவரத்னமாலா" **M.K. வெங்கடராமன்**

ஸ்ரீ காமாக்ஷியின் நவாவரணக் கீர்த்தனைகள் ஒன்பதும்
ஸ்ரீசக்ரப் படங்களுடனும் நவக்ரஹ ப்ரீதிக்கான
மந்த்ரங்களுடனும் எளிய நடையில் பதவுரையுடன்
விளக்கப்பட்டுள்ளன. அழகிய வண்ணத்தில்
ஸ்ரீ காமாக்ஷி அட்டையை அலங்கரிக்கிறாள்.

விலை ரூ. **30**

### SRIMAD BHAGAVAD GITA

(A Synopsis and Guide to the Study of the Text in English with Samskrit Text of Important Slokas)
by "Navarathnamala" M.K. Venkataraman, M.A.
Price Rs. 40; By Post Rs. 60

தபால் செலவைத் தவிர்க்க உங்களூர் புத்தகக் கடையில் கேளுங்கள். தபாலில் பெற எழுதுக.




தொகை அனுப்பவேண்டிய முகவரி: லிப்கோ பப்ளிஷர்ஸ் (பி.) லிட்.
36, வடக்கு ரோடு, மேற்கு C.I.T நகர், சென்னை - 600 035, போன்: 2434 1538, 2433 6467
ஷோ ரூம்: லிப்கோ அஸோஸியேட்ஸ், 'நாராயணா அபார்ட்மெண்ட்ஸ்', 23/G-5, ராமேஸ்வரம் ரோடு,
(மாம்பலம் ரெயில் நிலையம் அருகில்), தி.நகர், சென்னை - 600 017, போன்: 2432 3298
E-mail: info@lifcobooks.com | www.lifcobooks.com

**80 ஆண்டுகளாகப் புத்தக உலகில் பெரும்புகழ்!**

## ஜாலி ஸ்டோர்ஸ்

**(இயக்குனர் ஷங்கர் இயக்கும் 'எந்திரன்' படத்துக்கான பாடல் கம்போஸிங் தொடங்குவதற்காக அவரது அலுவலகத்தில் ஏ.ஆர். ரகுமான், வைரமுத்து, பா.விஜய் ஆகியோர் அமர்ந்திருக்கின்றனர்.)**

**ஷங்கர் :** *(மனதுக்குள்)* கடவுளே இந்த 'எந்திரன்' படத்துக்காவது கொடுத்த காசைத் திருப்பிக் கொடுன்னு எந்த விநியோகஸ்தரும் வீட்டுக்கு வரக்கூடாது.

**ரகுமான் :** ஷங்கர் எத்தனை பாட்டு, எந்தெந்த சிச்சுவேஷன்? கதையச் சொல்லுங்க?

**ஷங்கர் :** என்னது? கதையா! ரஜினி நடிக்கிறார்... அது போதாதா... கதை வேற யோசிக்கணுமா... அப்படியே யோசிச்சாலும் வெளிய சொல்லமாட்டேன். கதை 'லீக்' ஆயிடும்.

**வைரமுத்து :** இப்படித்தான் 'சிவாஜி'க்கும் சொன்னாங்க. ஆனா படத்துக்கு முன்னாடியே நெட்டுல பாட்டு வந்துடுச்சு.

**ஷங்கர் :** சரி... சிச்சுவேஷன் மட்டும் சொல்றேன். ஏவி.எம்.ல சாலிகிராமம் செட்டு போடறோம்.

# எந்திரீடா...



# உத்தமபுத்திரன்

# நீ மந்திரிடா!

**விஜய் :** செட்டு போடறதுக்கு சாலிகிராமத்துலயே எடுக்கலாமே.

**ஷங்கர் (கடுப்புடன்) :** விஜய்... குறுக்கப் பேசக்கூடாது... ரகுமான் சார்... ரஜினி மக்களை கட்டிப்புடிச்சுக்கிட்டு ஆடறார். ஓபனிங் ஸாங் பின்னிப் பெட லெடுக்கணும். வைரமுத்து சார் எழுத றார்.

**வைரமுத்து :** ஓ.கே... கேட்டுக்கங்க. ('பல்லேலக்கா' ஸ்டைலில் பாடுகிறார்)

'நல்லாருக்கா... நல்லாருக்கா

நாடுயிங்கே நல்லாருக்கா?

வோட்டு எல்லாம் போடறீங்க பிரியாணிக்கா...'

**ஷங்கர் :** இதையே வெச்சுக்குவோம்.. விஜய் உங்களுக்கு லவ் ஸாங்.

**விஜய் :** இதோ சார் ... (சஹானா மெட்டில் பாடுகிறார்)

'நிலாவே... வீடும் கூட்டுதோ

பலாவில் ஈக்கள் மொயக்குதோ'

**ஷங்கர் :** நல்லாயிருக்கு... கடல் செட்டு போட்டு தண்ணீரைக் காவி நிறத்துக்கு மாத்துவோம். நாலஞ்சு கண்ணாடிக் கப்பலையும் நிறுத்துவோம்.

**ரகுமான் :** ஆப்ரிக்கா தீவுல பிஜ்லாமா படவேட்டான்னு ஒரு சிங்கர். அவரைப் பாட வைப்போம். அடுத்து அரேபியன் ஆல்பத்துல அடிச்ச... ஸாரி நானே சொந் தமா மூளையை நகக்கி ஒரு ட்யூன் போட்டிருக்கேன். ('உயிரே' தையா தையா... மெட்டில் பாடுகிறார்.)

'இங்க எதிரியும் யாருடா பையா... பையா - என்

உதையில உதிருவான் நொய்யா'

**ஷங்கர் :** நல்லாயிருக்கு இருந்தாலும்... ஒரு கூடை சன் லைட் மாதிரி..

**ரகுமான்:** மூல வியாதியஸ்தன் வேதனைல முணுமுணுக்கிற மாதிரி தானே... போடறேன்.

**ஷங்கர் :** (அப்போது ஷங்கருக்கு போன் வருகிறது. பேசிவிட்டு) சிரிக்கா தீங்க.... ரஜினி சார் பேசினார்... அரசிய லுக்கு வர்றாராம்... கண்டிப்பா... உறுதியா... சத்தியம்னு சொல்றார். அரசி யல் பஞ்ச் டயலாக்கா வைக்கணுமாம்.

**வைரமுத்து :** அதுக்கென்ன கேளுங்க... ஆனா அதுக்கும் தனியா துட்டு கொடுத் துடணும். கபிலனுக்குக் கடிதம் எழுதி அதையும் காசாக்கிடுறவன் நான்... இதோ பஞ்ச். 'கடை யாணி கழண்டா வண்டி சாயும். ரோடு சாயாது... நான் ரோடுடா'

**விஜய் (குறுக்கிட்டு) :** நான் ஒண்ணு சொல்றேன். 'முத்தமிழ் தலைவா... உனக்கு இடும் மாலைக்கும் மூளை முளைக்கும்.'

**ஷங்கர் (குறுக்கிட்டு) :** இரு... இரு... ரஜினிக்கு 'பஞ்ச்' கேட்டா... சந்தடி சாக்குல கலைஞருக்கு 'ஜிங் ஜாக்' போடுறே... முதல்ல பாட்டு...

**வைரமுத்து :** சார்... பாட்டு ரெடி... (பாடுகிறார்)

'எந்திரா... எந்திரா... எந்திரிடா - நீ




கதை வெளியாயிடுமே.

**ரகுமான் :** சார்... சும்மா இதையே சொல்லாதீங்க... அதான் எல்லா பத்திரிகையும் எழுதறாங்களே... ரெண்டு ரஜினி... ஒரு ரஜினி 200 வருஷத்துக்கு முன்னால ஸயன்டிஸ்ட்... அவர் கண்டுபிடிக்கிற ரோபோ, அதுவும் ரஜினி. இதானே கதை.

**வைரமுத்து :** பொத்தி... பொத்தி... வைக்கறேன்னு எல்லார் வாய்க்கும் பூட்டு போடுவாங்க... பத்திரிகைக்காரங்க... ஆளாளுக்கு இதான் கதைன்னு 'பில்டப்' பண்ணி படத்தைக் காலி பண்ணிட றாங்க.

**ஷங்கர் (புலம்பியபடி) :** எப்படி கதை வெளியாச்சு, கார் டிரைவர், வேலையாள், வாட்ச்மேன்... அஸிஸ் டென்ட், இதுல யாரு சொல்லி யிருப்பா... ம்... ஆனா என்னைத் தவிர ரஜினிக்குக்கூட கதை தெரியாதே...

*(அப்போது காலிங்பெல் அலற, விஜய் கதவு திறக்க ஒரு சிறுவன் உள்ளே வருகிறான்)*

**சிறுவன் (ஷங்கரிடம்) :** சார் லேட்டஸ்ட்டா... 'எந்திரன்' சி.டி. வந்திருக்கு முப்பது ரூபாய்தான். வேணுமா?

**ஷங்கர் (கோபமாக) :** என்னது எந்திரன் சி.டி.யா! ஏண்டா இன்னும் ஷூட்டிங்கே போகலை.. எப்படிடா வரும்? கதை விடறியா?

**சிறுவன் :** 'எந்திரன்' படத்தோட சி.டி.யில்ல சார். ஸாங் கம்போஸிங் சி.டி. கடச்சுடச் சுட்டது... வேணுமா?

*(என்று சொன்னதும்... 'அடப்பாவிங்களா' என்றபடி மயங்கிச் சரிய... மூவரும் தாங்கிப்பிடிக்கிறார்கள்)*

எந்திரிச்சா நாளை முதல் மந்திரிடா'

**ஷங்கர் :** வெரிகுட்... விஜய் நீங்க லவ் ஸாங் பாடுங்க...

**விஜய் :** இதோ கேட்டுக்கங்க (பாடுகிறார்)

'கண்ணுக்குள்ள கரும்புள்ளி காந்தம் - அது
கன்னிப்பொண்ணு நெஞ்ச வந்து சீந்தும்'

**ஷங்கர் :** இடையிடையே இங்கிலீஷ் வேணும்.

**விஜய் :** ஓகே சார்... 'ஐ'க்குள்ள பிளாக்டாட்... மேக்னட்

**ஷங்கர் :** ஏம்பா... அப்படியே மாத்திப் பாடறே. கதை சொன்னா இன்னும் பாட்டு நல்லா வரும். ஆனா



# ஸ்ரீஅவ்வை ஹோம்

(ஆதரவற்ற அன்னையருக்கு புகலிடம் அளிக்கும் ஓர் அன்பாலயம்)

36, மாணிக்கவாசகர் சாலை, சேக்கிழார் நகர், குன்றத்தூர்

சென்னை-600 069. போன்: 044-3200 4200



## அனைவரும் கொண்டாடும் தீபாவளியை ஆதரவற்ற அன்னையரும் கொண்டாட உதவுங்கள்




தீபாவளி நல்வாழ்த்துக்கள்! வேதமாதா காயத்ரி தேவியின் பேரருளாலும் அவ்வையாரின் திருவருளாலும் சமுதாயத்தினரால் நிராகரிக்கப்பட்ட பெண் முதியோர்களுக்கு அடைக்கலம் அளித்து அவர்களுடைய நலனுக்காகவே அர்ப்பணிக்கப்பட்டுள்ளது ஸ்ரீ அவ்வை ஹோம். ஆதரவின்றித் தவிக்கும் வயதான அன்னையர்களுக்கு உணவு, உடை, இருப்பிடம், மருத்துவ வசதி மற்றும் அனைத்து தேவைகளையும் இலவசமாகப் பூர்த்தி செய்து, தினசரி இறைவழிபாடு, தியானம், கூட்டு பிரார்த்தனை செய்து பராமரித்து வருகிறோம். அன்னையர்களின் இந்த கூட்டுப் பிரார்த்தனையால் தங்களின் கோரிக்கைகள் நிறைவேறும். அனைவரும் மகிழ்ச்சியுடன் கொண்டாடும் தீபாவளி பண்டிகையை ஆதரவற்ற அன்னையரும் கொண்டாட உங்கள் அன்பளிப்புகளை பொருளாகவோ, தொகையாகவோ அனுப்பி உதவுங்கள். வயதான அன்னையருக்கு தீபாவளி திருநாளில் தாங்கள் செய்யும் சிறு உதவியும் நம்மை பெற்று சீராட்டி வளர்த்த அன்னையரின் உள்ளத்தை குளிரச் செய்வதற்கு இணையாகும்.

தீபாவளி காலை உணவுக்கு ரூ.500/- அனுப்பும் அன்பர்களுக்கு துளசி மாலை அனுப்பி வைக்கப்படும்

தீபாவளி மதிய உணவுக்கு ரூ.550/- அனுப்பும் அன்பர்களுக்கு ருத்ராட்ச மாலை அனுப்பி வைக்கப்படும்

தீபாவளி இரவு உணவுக்கு ரூ.450/- அனுப்பும் அன்பர்களுக்கு நவரத்தின மாலை ஒன்று அனுப்பி வைக்கப்படும்

ஒரு நாள் தீபாவளி உணவுக்கு ரூ.1500/- அனுப்பும் அன்பர்களுக்கு ஸ்படிக மாலை அனுப்பி வைக்கப்படும்

10 நாட்கள் உணவுக்கு ரூ.11,000/- அனுப்பும் அன்பர்களுக்கு பவள மாலை ஒன்று அனுப்பி வைக்கப்படும்

அன்னையர் ஒருவருக்கு ஒரு வருட மருத்துவச் செலவு ரூ.1300/- அனுப்பும் அன்பர்களுக்கு சந்தன மாலை அனுப்பி வைக்கப்படும்

காப்பகத்தின் ஒரு மாத பராமரிப்பு செலவுக்கு ரூ.4,000/- அனுப்பும் அன்பர்களுக்கு முத்துமணி மாலை அனுப்பி வைக்கப்படும்

தங்களின் திருமண நாள், பிறந்த நாள், தொழில் தொடங்கிய நாட்கள், முன்னோர்களின் நினைவு நாட்கள், பண்டிகை நாட்கள், அமாவாசை மற்றும் பௌர்ணமி, கிருத்திகையில் வயதான அன்னையர்களுக்கு தாங்கள் அளிக்கும் நன்கொடை எதுவாயினும் அன்புடன் ஏற்றுக் கொள்ளப்படும்.

ஒவ்வொரு மாதமும் பௌர்ணமி அன்று ஸ்ரீஅவ்வை ஹோமில் அஷ்ட ஐஸ்வர்யங்களை அள்ளித்தரும் காயத்ரி ஹோமம் நடைபெறுகிறது. இதில் பங்கு பெற சங்கல்ப கட்டணம் ரூ.300/-



காயத்ரி என்பதன் பொருள் தன்னை துதிப்பவரை, ஜபிப்பவரை காப்பாற்றுவது என்பது பொருள். காயத்ரி வழிபாடு நமக்கு நீண்ட ஆயுள், புகழ், செல்வம் மற்றும் புத்திர பாக்கியத்தை அளிக்கிறது. காயத்ரி மூல மந்திரம் பாவங்களை அழித்து, புண்ணியத்தை வளர்ப்பதற்கு தோன்றிய மந்திரமாகும். நோய் நொடிகளை தவிடுபொடியாக்கும் சக்தி இதற்கு உண்டு. குடும்ப பிரச்னைகள், தோஷங்கள், வியாபார தடைகளை போக்கும் சக்தியும் இதற்கு உண்டு. இந்த காயத்ரி ஹோமத்தில் பங்கு பெற சங்கல்ப கட்டணமாக ரூ.300/- அனுப்பும் அன்பர்கள் தங்களுடைய பிரார்த்தனைகளையும், கோத்ரம், ராசி, நட்சத்திரத்தையும் தெளிவாக எழுதி அனுப்பினால், தங்களுடைய பிரார்த்தனைகளுக்கு ஏற்ப தனித் தனியாக சங்கல்பம் செய்து, ஹோம பிரசாதத்துடன் ஸ்ரீகாயத்ரி யந்திரம், ஸ்ரீ காயத்ரி மகா மந்திரம், மகா மிருத்யுஞ்சை மந்திரம் மற்றும் ஜெப மாலா அடங்கிய சிடியும், காயத்ரி வண்ணப்படமும், காயத்ரி தேவி ரக்ஷை மற்றும் ஹோம பஸ்பமும் அனுப்பி வைக்கப்படும். காயத்ரிதேவியின் மகா மந்திரம் அனைத்து இல்லங்களிலும் ஒலித்து ஐஸ்வர்யம் பெற வேண்டும் என்பதே எங்கள் நோக்கம். வயதான அன்னையரை பாதுகாக்கவும் ஸ்ரீகாயத்ரி ஹோமத்தில் பங்கு பெறவும் தங்கள் நன்கொடையை மேற்கண்ட முகவரிக்கு Cheque/DD/MO மூலமாக SRI AVVAI HOME, CHENNAI என்ற பெயருக்கு அனுப்பி காயத்ரி தேவியின் திருவருளால் பூரண ஆயுளும் ஆரோக்கியமும் பெற்று, துன்பங்கள் நீங்கி, புகழ் மிகுந்த வாழ்க்கை பெற அன்புடன் வேண்டுகிறோம்.

## ஆதரவற்ற அன்னையர் வாழ்வில் தீப ஒளி ஏற்றுவோம்!

## நன்கொடைகளுக்கு 80G பிரிவின் படி வரி விலக்கு உண்டு

மேற்குத்தொடர்ச்சி மலையின் சரிவுகளில் தெரிகிற பசுமை கண்ணுக்குக் குளிர்ச்சியூட்டுவதாக இருந்தது. பசுங்காடுகளுக்கு நடுவே அருவியாய் பெருகிக் கொண்டிருந்தது சிறுவாணி ஆறு.

கிழ்ப்புறம் தார் போட்டிருக்கும் வாழைத் தோட்டங்களில் இந்த வருடம் அதிக மகசூல் கிடைக்கும் என்ற நம்பிக்கை, வெள்ளியங்கிரிக்குப் புத்

மல் ஓட்டி வந்து, கோகிலாக்கா வீட்டு முன் நின்று 'க்ணிங், க்ணிங்' என்று மணி அடிக்கவேண்டும் என்பது பூரணியின் நீண்ட நாள் ஆசையாக இருந்தது.

அழுகையும், கலவரமும் கலந்து ஒருவகை கலவையான சப்தம், தன்னைத் தூக்கத்திலிருந்து நெட்டித் தள்ளுவதாகப் பட்டது. அரிபரியாக எழுந்து கொண்டான்

# ஒரு சின்னப் புறாவும், சில ஏவுகணைகளும்...

துணர்வை தந்து கொண்டிருந்தது. அவன் முகத்தில் இப்போது வெளிச்சக் கீற்று அவனது மகிழ்ச்சியைக் காட்டிக்கொண்டிருந்தது.

''அப்பா இந்தவாட்டியாச்சும் எனக்கு சைக்கிள் வாங்கித் தருவீங்களா...?'' - அப்பாவின் முகத்தை அண்ணாந்து பார்த்தபடி கேட்டாள் பூரணி.

''ஏங் கண்ணு, அதுக்கென்ன... வாங்கிக் கொடுத்துட்டா தீந்தது...'' ஆதரவாகப் பூரணியைத் தட்டிக்கொடுத்தபடி சொன்னான் வெள்ளியங்கிரி.

''சித்திர போய் வையாசில வாழை வெட்டிரலாம்டா... கல்யாண மாசம் பாரு... நல்ல விலைக்கு ஆகும்... உடனே சூலூர் போயி நாச்சிமுத்து மாமா கடைல ஆளுக்கொரு சைக்கிள் வாங்கிக்கலாம். சந்தோஷம்தான கண்ணு...''

பூரணியும், முத்துவும் 'ஹையா... ஜாலி' என்றபடி கைகளை மேலே உயர்த்திக் குதித்தார்கள்.

சைக்கிள் வாங்கியவுடன் நேராக ஓடைக் காடு போய் சறுக்கலில் பெடல் மிதிக்கா

வெள்ளியங்கிரி. அழுகுரல்களும், அவலக் குரல்களும் அவனை ஒருவித பீதிக்குள்ளாக்கின. வீதிக்கு வந்தபோது ஊரே அல்லோகலப்பட்டது. எல்லோருடைய முகத்திலும் ஒரு கலவர பயம்.

பக்கத்துத் தோட்டத்து மாரப்ப நாயக்கர் பரபரப்பாக ஓடிவந்ததைப் பார்த்தபோது, 'கருக்'கென்றிருந்தது வெள்ளியங்கிரிக்கு.

வெள்ளியங்கிரியின் தோள்களைப் பற்றிக்கொண்டு உலுக்கினார் மாரப்ப நாயக்கர்.

''வெள்ளியங்கிரி... கடைசில நாம பயந்த மாதிரியே நடந்துடுச்சுப்பா. மேக்க இருந்த காட்டு யானைக எல்லாம் நம்ம தோட்டத்துல புகுந்து நாசம் பண்ணிடுச்சுப்பா...''

- மாரப்ப நாயக்கரின் குரல் உடைந்திருந்தது.

வெள்ளியங்கிரி வெலவெலத்துப் போனான். படபடவென்று வந்தது. முகம் வெளிறிப்போய் பயம் பிடித்துக் கொண்டது.

''மாரப்பண்ணா, வாங்கண்ணா போய்ப்

பார்க்கலாம்...''

''இல்ல வெள்ளியங்கிரி... நீ நினைக்கிற மாதிரி இல்ல... ஒண்ணு, இரண்டுண்ணா பரவால்ல... பதினோரு யானைகள் பக்கமா வந்திருக்குமாட்டமிருக்கு... மதம் கொண்ட மாதிரி யார் போனாலும் முடுக்கி விட்ருது..''

''போலீசுக்கு சொல்லியனுப்பி யாச்சா...?''

''போலீஸ் எல்லாம் விடியக்காத்தால மூணு மணிக்கே வந்துட்டாங்க... யானைகள விரட்ட முடியல... முதலமைச்சர் வரைக்கும் சேதி போய்ட்டதா பேசிக்கிறாங்க...''

# ஆதலையூர் சூரியகுமார்

''கும்கி யானைகளைக் கொண்டு வந்து வெரட்னாலும் ஆகும். அப்படியெதுவும் செஞ்சாங்களா இல்லியா...?''

''பதினோரு யானைக ஒட்டுக்கா வந்திருக்கு. அத்தனையும் முடுக்கிவுடணும்னா அத்தனை சுளுவான காரியமா...? பறை கொண்டு வந்து அடிச்சாக்க... ஆறு எடத்துல வேட்டு வெச்சு வெடிக்கறதுக்கும் ஏற்பாடாயிட்டுருக்கு. ஆனா யானைக நகர்றா மாதிரி தெரியலைன்னா பார்த்துக்கயேன்...''

''.....................''

## போட்டிக் கதை 7



''மயக்க ஊசி போட்றதுக்கு டாக்டர் வரவழைச்சிருக்காங்களாம்... வந்திட்டு இருக்காங்களாட்டருக்கு...''

''................''

''இப்படி எல்லா யானைகளும் ஒட்டுக்கா வந்துட்டதால ஊர்க்காரங்களுக் கெல்லாம் ஆபத்துனு சொல்லி எல்லாரை யும் பக்கத்துல இருக்கற டவுனுக்கு பாது காப்பா போகச் சொல்லிட்டாங்க...''

அதற்குள் போலீஸ் வேன் ஒன்று பொது மக்களை எச்சரித்தபடி சென்றது.

யானைகள் கட்டுக்கடங்காமல் ஊருக் குள் புகுந்திருப்பதால் குழந்தைகளும் பெரியவர்களும் சில நாட்களுக்குப் பாது காப்பான இடத்துக்குச் செல்லும்படி அறி வுறுத்திக் கொண்டிருந்தார்கள். உடனடியா கக் கிராமத்தை விட்டு வெளியேற, மாவட்ட நிர்வாகமே இலவசமாக பேருந்து வசதியைச் செய்திருந்தார்கள். இது நிலை மையின் தீவிரத்தை உணர்த்துவதாக இருந்தது.

யானைகள் இந்த அளவுக்கு வரும் என்று அவன் எதிர்பார்த்திருக்க வில்லை. பல மாதங்களுக்கு முன்பே யானைகளின் நடமாட் டம் அதிகரித்திருந்தது, ஊருக் குள் அனைவருக்கும் தெரிந்தே இருந்தது. இருந்தாலும் காட்டை விட்டு வெளியில் வந்து இவ்வளவு தூரம் வாழைத்தோப்புக்கு வந்து விடும் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. கம்பி வேலி அடைக்கலாம் என்று நினைத்தாலும் அர சாங்கம் கம்பி வேலி அடைக்கக்கூடாதென்று எச்சரித்திருந்தது. சிலர் கம்பி வேலிகளில் மின்சாரத்தைப் பாய்ச்சுவதால் அதற்குத் தடை போட்டிருந்தார்கள். குழந்தைகளோடு காரமடைக்கு வந்து சேர்ந்தான் வெள்ளியங் கிரி.

அரசு அதிகாரிகள், கும்கியானைகளின் பாகன்கள், போலீஸ் அதிகாரிகள் என்று ஒரு கூட்டமே முகாமிட்டிருப்பதை, அன்று மாலையே டி.வி.யில் காட்டிக் கொண்டிருந்தார்கள்.

வேட்டுச் சத்தம் கேட்டு யானைகள் பயந்தாலும்... காட்டுக்குச் செல்லத் தடம் தெரியாமல், வாழைத் தோட்டத்திலேயே சுற்றி வந்ததால் வாழைத்தோப்பு கண்முன் சகதியாகிக் கொண்டிருந்தது. தொலைக் காட்சியில் அதைப் பார்த்தபோது அவை திட்டமிட்டு அழிப்பது போலவே தோன்றி யது. சதிகாரனை அழிப்பது போன்று இந்த

## காமெடியில் முரளி

'' 'சுந்தரா டிராவல்ஸ்' படத்துக்குப் பிறகு, சிறிது இடைவெளிவிட்டு, நடிகர் முரளி நடிக்கும் படம் 'எங்க ராசி நல்ல ராசி'. இதுவும் முந்தைய படத்தைப் போலவே முழுக்க முழுக்க காமெடி சப்ஜெக்ட்தான். 'காசு இருக்கணும்' படத் தில் அறிமுகமாகி தற்போது 'ஆண்டாள் அழகர்' படத் திலும் கதாநாயகனாக நடித்து வரும் விஷ்வாவின் நடிப்பில் வெளிவரும் படம் இது. 'காசு இருக்கணும்' படத்தில் ரொம்ப ரஃப்பான கேரக்டரில் நடித்திருப்பார். ஆனால், 'எங்க ராசி நல்ல ராசி' படத்தில் முரளி - விஷ்வா இருவரும் காமெடியில் கலக்கியிருக்கின்றனர். இந்தப் படத்தின் தயாரிப்பாளரும் முதுபெரும் நடிகருமான ஜீ.ஆர். என்கிற ஜி. ராமசந்திரன் நடிக்கிறார். 'காசு இருக்கணும்' படத்தில் 'ராமாயி' என்கிற பெண் வேடத்தில் நடித்த இவர், இந்தப் படத்தில் முரளியின் அப்பாவாக நகைச்சுவை கலந்த வேடத்தில்

யானைகளுக்கு யார் மீது இத்தனை கோபம்? ஏன் இத்தனை ஆக்ரோஷம்?

''அப்பா... அப்பா... நம்ம வாழைத் தோட்டம்... யானை காயெல்லாம் மெதிக்குதுப்பா... அங்க பாருங்கப்பா...'' என்று டி.வி.யைப் பார்த்தபடியே கத்தினாள் பூரணி.

பணம் அழிவதோ, லாபம் பாதிக்கப்படுவதோ அவர்கள் கவலையாகத் தெரியவில்லை. வெயிலிலும், பனியிலும் நின்ற தன் வலி மட்டும் பாரமாய் அழுத்தியது.



கணவன் - மனைவி இருவர் கண்களிலும் நீர் கோர்த்துத் திரண்டது. தாம் அழுவதைக் குழந்தைகள் பார்த்துவிடக்கூடாதே என்பதற்காக அவசரமாக துடைத்துக்கொண்டார்கள்.

படத்தில் காட்டுவார்களே... டைனோசர் வாயில் மனிதர்கள் சிக்கிக் கொள்வது போல, அப்படியொரு கற்பனை வெள்ளியங்கிரியைப் பயமுறுத்தியது.

பூப்போல தொட்டுத் தொட்டுப் பார்த்து, குழந்தைகளாய் வளர்த்த வாழைகள் எல்லாம், யானையின் கால்களில் சிக்கிச் சிதைவதைக் காணமாட்டாமல் கண்களை மூடிக்கொண்டார்கள்.

**மீ**ண்டும் ஊருக்கு வந்தாயிற்று...

''என்னத்த நிவாரணம் கொடுத்து என்னத்துக்கு ஆகப் போவுது? கோரப்பசிக்கு ஆரப்புல்ல போட்ட மாதிரி... அழிஞ்சது என்னவோ ரெண்டு ஏக்கரு வாழை. ஏக்கருக்கு ரெண்டாயிரம் ரூவா தர்றாங்களாமா. அதையுங்கூட வாங்கறதுக்கு மணியக்காரரு வீட்டுக்கு இன்னும் எத்தனை தடவ நடக்கணுமோ தெரியலியே... அவர் வேற எங்கெல்லாம் தாட்டிவுடப் போறாரோ... அதுவும் தெரியல...''

வெள்ளியங்கிரி சலித்துப் போய்ச் சொன்னான்.

''இருக்கற நிலத்தையெல்லாம் ஃப்ளாட் போட்டு ஃப்ளாட் போட்டு கம்பெனியாட்களுக்கு வித்தாச்சு. இதுல என்ஜினீயரிங் காலேஜு, துணி ஃபேக்டரின்னு ஆளாளுக்கு எடத்தை வளச்சுப் போட்டு காம்பவுண்டு எடுத்து வெச்சிருக்கான்ங்க. யானைக போற தடத்தையெல்லாம் அடச்சு மறைச்சு வெச்சாச்சு... அதான் அதுக தடம் தெரியாம ஊருக்குள்ள புகுந்துருச்சுங்க...''

**தோன்றுகிறார்.**

**இந்தப் படத்தில் கவிஞர் கருணாநிதி எழுதிய பாடல் :**

**வைரமுத்து வரிகளில் பாடட்டுமா - இல்ல**
**வாலியின் வரிகளில் உன்னைப் புகழட்டுமா**
**பட்டுக்கோட்டை பாடல் உனக்குப் புடிக்குமா**
**உன் புகழைப் பாட கண்ணதாசன் வரணுமா**

**நிச்சயமாக இளைஞர்கள் மத்தியில் புகழ் பெறும்'' என்கிறார்கள் இப்படத்தின் இரட்டை இயக்குநர்கள் - ரவி ராஜா. ●**

- மாரப்ப நாயக்கர் கோபப்படுவது தெரிந்தது. வெள்ளியங்கிரி ஒன்றும் பேசாமல் நடந்தான்.

''யானைங்க வாழ்ற எடத்துலயே ஏக்கரா கணக்கில வளச்சுப் போட்டு காம்பவுண்டும் கான்கிரீட்டுமா பண்ணுனா... வாயில்லா ஜீவனுக... எங்கத்தான் போவும்... எப்படி உயிர் வாழும்? வெள்ளியங்கிரி நமக்குப் புத்தி உசரம் பத்தாது...''



## இப்ப எங்கப்பா போறோம்?

''உங்க அம்மாவோட நகையெல்லாம் அடகு வெச்சு கடன் வாங்கப் போறோம்டா.''

- மாரப்பநாயக்கர் கோபத்தின் உச்சியில் வார்த்தைகளை நெருப்பாய் உமிழ்ந்து கொண்டிருந்தார்.

''ஆனது ஆகிப்போச்சு... மாரப் பண்ணா, இனி என்னத்தப் பேசி ஆகப் போவுது. வேகமா நடந்தாலும் ஆகும்... மணியக்காரர் புறப்பட்டுப் போய்டுவார்...'' வெள்ளியங்கிரி சலித்துக் கொண்டான்.

''இல்ல... வெள்ளியங்கிரி... காட்டையே அழிச்சிட்டு வீட்டுக்கொரு மரம் நடோணுமா... வேக்கியானம் பேச றாங்க...''

அந்தக் கட்டிடங்களைப் பார்க்கப் பார்க்க... கோபமாக வந்தது வெள்ளியங் கிரிக்கு.

''இப்ப எங்கப்பா போறோம்?'' - விரல்களைப் பிடித்துக் கொண்டு நடந்தபடியே பூரணி கேட்டாள்.

''டவுனுக்குப் போயி உங்க அம்மாவோட நகையெல்லாம் அடகு வெச்சு கடன் வாங்கப் போறோம்டா. நாம ஆசையா வளத்த வாழைத் தோட்டத்தை யெல்லாம்... யானைங்க வந்து மிதிச்சிருச் சுல்லா... அத்தனையும் போச்சுடா... போயம்பாளையம் மாமாகிட்ட வாங்கி யிருந்த பணத்தைத் திருப்பிக் கொடுக் கணும்டா... செல்லம்...''

வெள்ளியங்கிரியின் வார்த்தைகளில் வெறுமையும் ஆதங்கமும் தெறித்து விழுந் தன. விரக்தி வீரியம் கொண்டிருந்தது.

''அப்படீன்னா எனக்கு இப்போ சைக் கிள் வேணாம்ப்பா... அடுத்த வருஷம் வரைக்கும் வாடகை சைக்கிள்லேயே நல்லா ஓட்டிப் பழகிக்கிறேன்ப்பா...''

எந்தக் கஷ்டம் குழந்தைக்குத் தெரியக் கூடாது என்று நினைத்தானோ, அது தெரிந்துபோனதில் மிகவும் வருத்தப்பட் டான் வெள்ளியங்கிரி.

பிரமாண்டமான அந்தத் தொழிற்சாலை யின் காம்பவுண்டை ஒட்டி நடந்து கொண் டிருந்தார்கள்.

ஒரு சிறிய கல்லை எடுத்து கோபமாக அந்த காம்பவுண்ட் சுவர் மீது எறிந்தாள் பூரணி. அது சுவரின் மீது 'ணங்' என்று மோதிக் கீழே விழுந்தது.

''அப்பா... அப்பா... இந்த காம்பவுண்ட் சுவர் இங்க கட்னதாலதான.. நம்ம தோட் டத்துக்குள்ள... யானைக வந்துச்சு...'' என்று விழிகள் விரித்துக் கேட்டாள் பூரணி.

அவளை ஆச்சரியமாகப் பார்த்தான் வெள்ளியங்கிரி. ❑

# போலீஸ் உங்கள் நண்பன்




'''போலீஸ் உங்கள் நண்பன்'-னு கட் அவுட் நிக்குதே... அது யார் வீடு?''

''ஏரியா திருடன் கபாலி வீடு!''

- அம்பை தேவா



''என் மனைவி கத்தும் போது நான் அமைதியாக இருந்திடுவேன்.''

''ஏன்?''

''அப்பதான் தொண்டை கட்டி, அவள் பேச முடியாமல் அமைதியாயிடுவாள்!''

- எம். அசோக்ராஜா

''இது ரொம்ப சின்ன ஆபரேஷன்தான், இருந்தாலும் நீ வீட்டு வேலை செய்யாம ரெஸ்ட் எடுக்கறது பெட்டர்!''

''எவ்வளவு வருஷத்துக்குன்னு என் மாமியார்கிட்டே சொல்லிடுங்க டாக்டர்!''

- வெ.சீதாராமன்





''வயித்து வலி தாங்க முடியலை டாக்டர்.''

''வலி வரும்போது நீங்க ஏன் தாங்கறீங்க...!''

- ஏ. அஹமது இர்ஷாத்



''பணம் சம்பாதிப்பது எப்படின்ற நிகழ்ச்சி ஒண்ணு நான் டி.வி.ல பண்ணப் போறேன்.''

''அதுக்கு நான் என்ன பண்ணணும்...?''

''நீங்க அந்த நிகழ்ச்சிக்கு விளம்பரம் வாங்கித் தரணும்.''

- வி. சாரதிடேச்சு

இரா.முருகன்

# கிடைப்பாரா

டிஜிட்டல் தேடல்

பூமியும், கிரகங்களும், சூரியனும் இல்லாத காலம் அது. உறையவைக்கும் குளிர். ஆயிரத்து முன்னூறு கோடி வருடங்களுக்கு முந்தைய அந்தக் காலகட்டத்தில், அண்டப் பெருவெளியில் ஒரு வெடிப்பு ஏற்பட்டது. இந்த அண்டப் பெருவெடிப்பு ஏற்பட்டதும் எங்கும் பெரும் வெப்பம் சூழ்ந்து கவிந்தது. அணுத் துகள்களான நியூட்ரான்களும் புரோட்டான்களும் ஒளியின் வேகத்தில் பாய்ந்து ஒருசேரக் கலந்தன. இக்கலப்பில் அணு மையப்பொருள் தோன்றியது. வெப்பம் சற்றே குறைய இன்னொரு 379,000 ஆண்டுகள் பிடித்தன. இப்போது மற்ற அணுத் துகளான எலக்ட்ரான்களும் அணு மையப் பொருளும் சேர, ஹைட்ரஜன் வாயுவின் அணு உருவானது. அந்த அணுவில் பிறந்ததுதான் நாம் இருக்கும் இந்தப் பிரபஞ்சம்.

விரிந்துகொண்டே போகும் பிரபஞ்ச வெளியில் விண்மீன் தொகுதிகளை இழுத்துப் பிடித்து ஒட்டவைத்த கரும் சக்தியை உருவாக்கியது எது? கண்ணுக்குப் புலப்படாத இன்னொரு துகள் இந்த ஆச்சரியத்தை நிகழ்த்தியதாம். ஆன்மிகத்துக்கு அருகே நெருங்கி விட்டோம். காணக் கிடைக்காத அந்தத் துகள்தான் கடவுள் துகள்.

சகல பொருட்களுக்கும் வல்லமையும் உயிர்க்கனமும் தரும் கடவுள் துகள், இன்னும் ஒரு கோட்பாடு என்ற நிலையிலேயே இருக்கிறது. அந்தத் துகளை அறிவியலும் தொழில்நுட்பமும் தேடத் தொடங்கியுள்ளன.

சுவிட்சர்லாந்து நாட்டின் தலைநகர் ஜெனிவாவுக்கு அருகே 'Cern' ஆய்வு மையம் கோடிக்கணக்கில் செலவழித்து

# கடவுள்?



ஒரு ஆராய்ச்சியைத் தொடங்கியுள்ளது.

அண்டப் பெருவெடிப்பு காலத்தில் இருந்த சூழ்நிலையை செர்ன் ஆய்வுக் கூடத்தில் நகலெடுத்தது போல் உருவாக்கியிருக்கிறார்கள். கல்லும் பாறையுமான நிலப்பரப்பில், தரைக்கு நூறு மீட்டர் கீழே சகல பாதுகாப்போடும் அமைந்த ஆய்வரங்கம் இது. இங்கே பெருங்குளிர் சூழலுக்கு நடுவே, மோதிரம் போல விரியும் குழல் பாதைகள் இருபத்தேழு கிலோமீட்டர் நீளம் கொண்டவை. இந்தப் பாதைகளில் கொஞ்சம் போல் பிரபஞ்சம் உருவாகிறது. அதாவது, Big Bang காலகட்டத்தில் நிகழ்ந்தது போல், அணுத் துகள்களான புரோட்டான்கள் கிட்டத்தட்ட ஒளியின் வேகத்தில் இந்தக் குழல் பாதைகளில் சுற்றிச் சுழன்று பயணம் போகின்றன. குழல்கள் நடுநடுவே சந்தித்து வேறு திசைகள் நோக்கிப் பிரிகிறவை என்பதால், இந்த அணுத்துகள்கள் வேகத்தோடு சில நேரங்களில் ஒன்றோடொன்று மோதிக் கொள்ள வாய்ப்பு உள்ளது. அந்த மோதலை வினாடிக்குப் பல லட்சம் புகைப்படங்களாக, நகரும் ஒளிச் சித்திரங்களாகப் பதிந்து வைக்க நூற்றுக்கணக்கில் அதிநவீன காமிராக்கள் பாதை முழுக்கக் காத்திருக்கின்றன.

செப்டம்பர் பத்தாம் தேதி இங்கே ஒரே திசையில் இரண்டு குழல் பாதைகளில் புரோட்டான்களை வெற்றிகரமாகப் பயணம் செய்ய வைத்திருக்கிறார்கள். அவற்றில் சில ஒன்றோடொன்று மோதிக் கொண்டதும் நிகழ்ந்திருக்கிறது. செயற்கையாக அணுத் துகள்களை மோத வைத்தால், அது சின்னச் சின்னக் கருந்துளைகளை உருவாக்கி மனிதகுலத்துக்குப் பெருநாசம் ஏற்படுத்தும் என்று சில அறிஞர்கள் பயமுறுத்தினார்கள். நல்ல வேளை. ஆராய்ச்சி நடந்தபோது, சின்னதோ பெரிசோ, கருந்துளை ஏதும் உருவாகவில்லை. அடுத்த கட்ட ஆய்வில் அணுத்துகள்களை எதிரெதிர் திசைகளில் செலுத்தி மோதச் செய்யப்போகிறார்கள். கடவுள் துகள் அப்போது புலப்பட வாய்ப்பு உள்ளதாம்.

'கடவுள் துகளை இந்த ஆராய்ச்சி கைவசமாக்கினால், நூறு டாலர் தருகிறேன்' என்று பந்தயம் கட்டியிருப்பவர், பிரபல வான்பொருளியல் அறிஞர் ஸ்டீஃபன் ஹாக்கிங். 'ஏற்கெனவே நாம் அறிந்த அணுத்துகள்களுக்குப் பங்காளிகளான, சூப்பர் பார்ட்னர் துகள்களை வேணுமானால் கண்டுபிடிக்க முடியும். அப்போது கடவுள் துகள் கோட்பாட்டையே நாம் மாற்ற வேண்டி வரலாம்'. அடித்துச் சொல்கிறார் ஹாக்கிங். துகளை மட்டும் கண்டால் கடவுள் தெரியாதா? தேடுவோம். ■

**மேஷம்:** திருமணம் கைகூடும். வெளிநாட்டிலிருந்து நல்ல தகவல் வந்து சேரும். பணக் கஷ்டம் தீரும். உத்தியோகத்தில் உயர்வு ஏற்படும். மன சஞ்சலம் தீரும். குழந்தைகள் இடம் மாறிச் செல்வார்கள். தொழில் துறையில் அபரிமிதமான லாபம் கிட்டும். வீடு/மனை வாங்க நல்ல காலம். ராகு/கேது/சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**ரிஷபம்:** தெய்வ அனுகூலம் நிறைந்து இருக்கும். தொலைதூரப் பிரயாணம் வந்து சேரும். வேலையில் இட மாற்றம் ஏற்படும். நண்பர்/உறவினர்களால் நற்பலன் ஏற்படும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். பொருளாதார சிரமம் குறையும். சனி/குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**மிதுனம்:** சுப நிகழ்ச்சி கைகூடி வரும். வாக்குவாதம் தவிர்க்கவும். கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கை அவசியம். வாகனங்களில் செல்லும் போது உஷார். சொத்து வாங்கும் யோகம் ஏற்படும். கல்வி வளம் மேலோங்கும். கூட்டாளிகளை விட்டு விலக நேரிடும். எதிர்ப்புகள் விலகும். ராகு/கேது வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.



ஜெயலலிதா, கைதிகளை விடுதலை செய்தால் அமைதியாயிருக்கின்ற கம்யூனிஸ்டுகள், அண்ணா நூற்றாண்டில் நாம் விடுதலை செய்தால் எதிர்க்கிறார்கள்.
**நம்ம ராசி அப்படி!**

**கடகம்:** திருமணத் தடை விலகும். கணவன் மனைவிக்குள் விட்டுக் கொடுத்துப் போவது நற்பலனை அளிக்கும். பணத் தேவை அதிகரிக்கும். மறைமுக எதிரிகளால் தொல்லை உண்டு. கொடுக்கல் வாங்கலில் அதிகக் கவனத்துடன் செயல்படவும். ராகு/கேது/குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**சிம்மம்:** சுப காரியம் கூடி வரும். வாகன சுகம் கிட்டும். வீடு/மனை வாங்க உகந்த காலம். பொருளாதார சிரமம் இருக்காது. கணவன் மனைவி உறவு நன்றாக இருக்கும். வியாபாரத்தில் நல்ல வருவாய் கிட்டும். வழக்கு வெற்றி அளிக்கும். சனீஸ்வர வழிபாடு நற்பலனை அளிக்கும்.

**கன்னி:** பூர்வீகச் சொத்து பாகப் பிரி

## 28.09.08
## முதல்
## 04.10.08
## வரை

**தஞ்சை பரத்வாஜ்**

   

வினை ஆகும். கூட்டாளிகள் விட்டு விலகிப் போவார்கள். வீடு மாற்றம் உண்டாகும். வேலைப்பளு அதிகரிக்கும். படிப்பில் கவனம் செலுத்தவும். மனச்சலனம் தீரும். தொழில் துறையில் சற்று மந்தமான சூழல் காணப்படும். பணவரவு பெருகும். ராகு/கேது/சனி/குரு வழிபாடு செய்துவர நற் பலன் அளிக்கும்.

**துலாம்:** வியாபாரத்தில் இடமாற்றம் செய்யும் நிலை ஏற்படும். உத்தியோகத்தில் இட மாற்றம் ஏற்படும். எதிர்ப்புத் தொல்லை விலகும். வழக்கு வெற்றி அளிக்கும். திருமணம் கைகூடும். கொடுக்கல், வாங்கலில் சிக்கல் தீரும். வராத நிலுவைகள் வந்து சேரும். வழக்கு வெற்றி அளிக்கும். ராகு/கேது/ குரு வழிபாடு செய்துவர நற்பலன் சித்திக்கும்.

பலனை அளிக்கும். ராகு/கேது/குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**மகரம்:** மனக்குழப்பம் தீரும். நற்பலன் நடக்க சற்று காலதாமதம் ஆகும். வேலைப்பளு அதிகரிக்கும். உடல் ஆரோக்கியத்தில் கவனம் செலுத்தவும். மறைமுக எதிர்ப்புகள் இருக்கும். பொருளாதார சிரமம் தீரும். புதிய கடன் கிடைக்கும். வியாபாரத்தில் சற்று மந்தமான சூழ்நிலை காணப்படும். ராகு/கேது/சனி/குரு வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**கும்பம்:** கடன் தொல்லை தீரும். மனச் சலனம் விலகும். எதிர்ப்புகள் விலகும். நீண்ட காலம் இருந்து வந்த பிரச்னை முடிவுக்கு வரும். வீடு/மனை வாங்க சிறந்த தருணம். நண்பர்/உறவினர்களால்

# நடக்குமென்பார்; நடக்கும்!

**விருச்சிகம்:** பண வருவாய் ஏற்படும். ஆடை ஆபரண அலங்காரப் பொருட்கள் சேரும். நண்பர்/உறவினர்களால் நற் தகவல் வந்து சேரும். எதிர்ப்புகள் விலகும். நிலபுலன் வாங்க ஏற்ற தருணம். வழக்கு வெற்றி அளிக்கும். புதிய தொழில் முயற்சி கைகூடும். சனி வழிபாடு செய்துவர நற் பலன் உண்டாகும்.

**தனுசு:** பேச்சில் நிதானம் அவசியம். வாக்குவாதம் தவிர்க்கவும். கூட்டாளிகள் விலகிப் போவார்கள். படிப்பில் கவனம் செலுத்தவும். வேலைப்பளு அதிகரிக்கும். மறைமுக எதிர்ப்புகள் விலகும். உடல் நலனில் கவனம் தேவை. குடும்ப வழியில் விட்டுக்கொடுத்துப் போவது நற்

அனுகூலம் ஏற்படும். எதிர்பாராத தன யோகம் கிட்டும். ஆடை ஆபரண சேர்க்கை கிட்டும். சனி வழிபாடு செய்துவர நற் பலன் பெருகும்.

**மீனம்:** கூட்டாளிகளை விட்டு விலகிப் போவீர்கள். பூர்வீகச் சொத்து வந்து சேரும். தொழில்துறை அபிவிருத்தி ஏற்படும். கல்வி வளம் மேலோங்கும். வேலையில் இட மாற்றம் ஏற்படும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். வழக்கு வெற்றி அளிக்கும். குழந்தைகள் இடம் மாறிப் போவார்கள். சுபகாரியம் கைகூடும். வேலையில் நற்பெயர் கிட்டும். ராகு/கேது/ குரு வழிபாடு செய்துவர நற்பலன் கிட்டும்.



# குறைந்த தூக்கம் நிறைந்த அழகு

எழுந்தவுடன் வயிறும் உடம்பும் லேசாக காற்றாய் உணர்ந்தாள் அருணா. ஹரியும் அதற்குப் பழக ஆரம்பித்திருந்தான்.

அருணா முன்னைவிட சுறுசுறுப்பாய் உணரத் தொடங்கினாள். மாவுச் சத்தைக் குறைத்து, அதிக காய்கறி பழங்கள் எடுத்துக்கொள்வதால் முகத்தில் பருக்கள் குறைய ஆரம்பித்திருந்தன.

ஹரிகூட இப்போது ஜிம்மே பழியாய்க் கிடக்க ஆரம்பித்தான். அதனால் கிடைத்த முதல் மற்றும் முக்கிய பலன் கான்ஸ்டிபேஷனுக்கு 'பை' சொன்னதுதான்.

இப்போது ஜிம்மில் எல்லா உடற்பயிற்சியும் வலியின்றிச் செய்ய முடிந்தது. இருவரும் கீழே உட்கார்ந்திருக்கும்போது ஏதாவது சாமான் எடுக்க வேண்டுமென்றால், ஸ்வேதாவை ஏவுவதில்லை. சட்டென்று எழுந்திருக்க முடிந்தது.

அன்று ரம்யா, ஆடி வெள்ளி என்று வெத்தலை பாக்கு வாங்கக் கூப்பிட்டிருந்தாள். ரம்யாவின் வீட்டினுள் உள்ளே நுழையும்போதே அவள் மாமியார், ''என்னடிம்மா இளைச்சுருக்காப்ல தெரியறது. ரொம்ப மெனக்கெடறயோ'' என்றார். அருணாவுக்குக் கால் நிலத்தில் இல்லை. அவள் வாயைத் திறப்பதற்குள் ரம்யா ஓடிவந்து, ''ஆமாம்மா... அவ நிறைய வொர்க்அவுட் பண்றா. போதாக்குறைக்கு ஸ்ட்ரிக்ட் டயட் வேற. நம்மால முடியாதும்மா'' என்றாள். ''இந்தா சர்க்கரைப் பொங்கல்'' என்று கப்பில் கொடுத்தாள் ரம்யா.

ஒரே ஒரு ஸ்பூன் எடுத்துக்கொண்டு முடித்துக் கொண்டாள் அருணா. ''பரவாயில்லை. ஒரு நாள்ல ஒண்ணும் ஆயிடாது'' என்றார் மாமியார். ''இல்ல ஆன்ட்டி... போதும்'' என்று வெத்தலை பாக்கை வாங்கிக்கொண்டு கிளம்பினாள் அருணா.

இப்போதெல்லாம் ஹரியுடன் வண்டியில் செல்லும்போது, எதிரில் பார்ப்பவர்களைக் காட்டி நான் இந்த சைஸா இருக்கேன் என்று கம்பேர் செய்ய ஆரம்பித்திருந்தாள். 'ஏதுடா... ரோதனையாப் போச்சு' என்று தலையில் அடித்துக்கொண்டான் அவனும். அன்று அப்படித்தான் வண்டியில் போகும்போது ஸ்வேதா முந்திக்கொண்டாள். எதிரில் ஸ்கூட்டி ஓட்டிச் சென்ற ஆன்ட்டியைக் காண்பித்து 'இந்த சைஸ்மா' என்றாள். காதில் விழுந்து முறைத்துவிட்டுச் சென்றாள் அந்த ஆன்ட்டி.

ஒருவர் தன் எடை அதிகரித்துள்ளது என்று உணர்ந்தவுடன், டயட் ஆரம்பிப்பதுடன் மருத்துவரிடமும் செல்ல வேண்டும். முதலில் அவருக்கு சில அடிப்படைப் பரிசோதனைகள் மேற்கொள்ளப் படும். அவரது மெட்டபாலி

**50 Kg தாஜ்மஹால்!**

ஸம் எனப்படும் உடல் செயல்பாடு கண் காணிக்கப்படும். சிலருக்கு இரத்த சோகை காரணமாகவும் உடல் எடை அதிகரிக்க வாய்ப் புண்டு. அதற்கு மருந்துகள் எடுத்துக்கொள்வதால் கூட எடை குறையலாம். அதனால் இவ்விழிப் புணர்வு, வயது வேறுபாடின்றி ஆண், பெண் இருவருக்கும் இருப்பது அவசியம்.

# லக்ஷ்மி மோகன்

உடல் எடையைக் குறைக்கிறேனென்று பெரும் பாலானவர்கள் மொட்டைப்பட்டினி கிடப்பார்கள். அது முற்றிலும் தவறு.

சாப்பிடும்போது மெதுவாகச் சாப்பிடவும். ஒவ் வொரு கவளத்தையும் நன்கு மென்று மெதுவாக









விழுங்கவும். இடையில் தண்ணீர் குடிக்கலாம். அப் போது வயிறு சீக்கிரம் நிறை யும் உணர்வு இருக்கும். இடை யில் பசி அதிகம் எடுத்தால், சமைத்த பீன்ஸ், கேரட் போன்ற பொரியல்கூட ஒரு கப் எடுத்துக்கொண்டு தண்ணீர் குடித்தால் வயிறு நிரம்பும்.

எந்த ஒரு இலக்கையும் அடைய தூக்கத்தைக் குறைப் பது முக்கியம். நிறைந்த அழகுக்கு குறைந்த தூக் கம். எடை குறைப்பில் தீவிர மாக இருப்பவர்களுக்கு இது மிகவும் அவசியம். வாக் போக நேரமில்லை; உடற்பயிற்சி செய்ய நேரமில்லை என்று சொல்வது தவறு. எப்போ தும் எழுந்திருப்பதைவிட ஒரு மணி நேரமாவது முன்னால் எழுந்திருக்கப் பழக வேண் டும்.

தொப்பை இருப்பவர்கள் வெறும் வாக் மட்டும் செய்து பிரயோஜனம் இல்லை. ஃப்ளோர் எக்ஸர்ஸைஸ் எனப் படும், தரையில் படுத்துக் கொண்டு செய்யும் பயிற்சிகள் மற்றும் ஆசனங்கள் ஆகிய வையே பலன் தரும்.

அதேபோல், அவசரப்படக் கூடாது. புதுவிதப் பழக்கத் துக்கு ஒத்துப்போக உடலுறுப் புகளுக்குக் கொஞ்சம் அவகா சம் கொடுங்கள். முதல் ஆறு மாதம் வரைகூட எடையில் மாறுபாடின்றி பிறகு தெரிய வரும். ஏற்கெனவே சொன்னது போல், முதலில் உங்களுக்கு அதை உங்கள் டிரெஸ் சொல்லி விடும். அதனால் இவ்விஷயத் தில் மிகவும் பொறுமை அவ சியம். ○



# ஸோல்ஜர்

**க**ர்மாநுஷ்டானங்களைச் செய்துகொண்டு, நல்ல தெய்வபக்தியுடனும், எல்லோரிடமும் பிரேமையுடனும், தெளிந்த ஞானத்துடனும், நேர்மையான வாழ்க்கை நடத்திய பெரியார்கள் நம் மதத்தில் ஒவ்வொரு தலைமுறையிலும் தோன்றிக்கொண்டே இருந்திருக்கிறார்கள். இவர்கள் பெரிதாகத் தத்துவப் பிரசாரம் என்று செய்யவேண்டும் என்பதில்லை. ஆனால், இப்படிப் பட்டவர்களைப் பார்த்த மாத்திரத்திலேயே இவர்களிடம் பொது ஜனங்களுக்கு மதிப்பு ஏற்பட்டிருக்கிறது.

நாஸ்திகமும் ஸயன்ஸும் லௌகிகமும் தலைதூக்கியுள்ள இப்போதும் இப்படிப்பட்டவர்கள் நம்மிடை தோன்றிவிட்டால் போதும், மதத்துக்கு விரோதமான சக்திகளுடன் பௌதிகமாகவோ, வாத விவாதத்தாலோ யுத்தம் செய்கிற சைன்யம் ஏதும் நமக்குத் தேவையில்லை. எவரிடமும் யுத்தம் செய்யாமல், எது நடந்தாலும் நடக்கட்டும் என்ற துணிவோடு, தம்பாட்டில் கர்மாநுஷ்டானங்களைச் செய்து கொண்டு, சீலர்களாக வாழ்கிற **அஹிம்சா ஸோல்ஜர்**களே இன்று நமக்குத் தேவை. 'ஸோல்ஜர்' என்று ஏன் சொன்னேன் என்றால் அவன்தான் சாகத் துணிந்தவன். அப்படியே இவர்கள் பிராணத்தியாகத்தையும் பொருட்படுத்தாமல் ஸ்வதர்மங்களை அநுஷ்டிக்க வேண்டும். சண்டை போடுவதில் ஸோல்ஜர் இல்லை; சாகத் துணிந்ததிலேயே ஸோல்ஜர். தங்களது வாழ்க்கையின் தூய்மையால் தெய்விகம் பெற்று, பிறர் அனைவரிடமும் காட்டும் அன்பினால் அவர்களின் மதிப்பைப் பெற்று விளங்கும் இப்படிப்பட்ட சிஷ்டர்கள் நம் மதத்தில் தோன்றிக் கொண்டிருக்கும் வரையில், இருள் தானாக விலகி ஒளி வீசிக்கொண்டேயிருக்கும். சுய ஆசைகள் இல்லாமல், சாஸ்திரம் விதித்த பிரகாரம் கர்மாநுஷ்டானம் செய்யத் தொடங்கினால் தன்னால் கட்டுப்பாடு, சித்தசுத்தி முதலிய குணங்கள் உண்டாகி, ஒவ்வொருவரும் உத்கிருஷ்டமான நிலையை அடையலாம். அனைவரும் அடைய முடியாவிட்டாலும் தோஷமில்லை. அனைவருமே இப்படி ஒரு முயற்சி செய்தால்தான் லட்சத்தில் ஒருவராவது உண்மை மகானாக உருவாக முடியும்.

**– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

# அலையின் உணர்வுபாடல்!

**கொற்றவன்**

எனக்குள் உன்னை
இழுத்துக் கொண்டோடும்
பெருமுயற்சியுடன்
நுரைத்துப் பொங்கியபடி
ஆர்ப்பரித்து வரும் என்னை
கட்டுக்குள் வைத்திட,
சந்தர்ப்பம் பார்த்து
சற்றே பெயர்ந்து விழுந்து
சமாதானப்படுத்துகிறாய்
படிமக் கரையென நிற்கும் நீ.
என் ஒவ்வொரு மோதலிலும்
ஆழத்திலிருந்து
கிளர்ந்தெழுவதை
கரை ஒதுக்குகிறேன் -
எவ்விதப்
பகுப்பாய்வுகளுமற்று.
என்னுள்
குவிந்திருக்கும் சேகரம்
ஆலகாலமா? அமுதமா?
எவ்விதம் நீ
தீர்ப்பளித்தாலும்,
ஓயவா போகிறது -
கரை மடி மீதான
என் வீரிய மோதுதலும்
உன்மேல் குவியும்
பாற்கடற் பொருட்களும்.

WELCOME TO

The Annual Cultural Extravaganza of LOYOLA C

Ovations '08

# கரகம்

## கல்லூரிக் காலை

பிரிக்க முடியாதது எது என்று ஒரு பட்டியல் போட்டால், இருபத்தொன்றாம் நூற்றாண்டில் நமக்கு முதலில் நினைவுக்கு வருவது யூத்தும் மொபைலும் தான். அதுவும் மொபைலில் வரும் SMSக்குத்தான், இளசுகளிடம் ஏக கிராக்கி. தாங்கள் ரசித்துக் கொண்டாடிய SMS ஜோக்குகளை இங்கே பகிர்ந்து கொள்கின்றனர் லயோலா கல்லூரி மாணவர்கள்... தலையில் வைக்கிற கரகம் எப்படி சுத்திச் சுத்தி விழாமல் வலம் வருமோ அதுபோல இந்த SMSகளை படிச்ச உடனே யூத் சிரிப்பு உதட்ட சுத்திவந்தா உங்களுக்கு வயசாகலைன்னு அர்த்தம். அந்த சாம்பிள் SMS-ல் கொஞ்சம்... என ஒவ்வொருவராய் அவிழ்த்துவிட்டனர்...

**சந்தானம்:**

"ஏய் சண்டியூஸ்... மெரீனா பீச்சுல மீன் சாப்பிட்ட மூணு பேரு மண்டையப் போட்டுட்டாங்களாம்."

"ஐய்யோ ஏதாவது பாய்ஸன் கலந்து இருக்கும். இல்ல கடல்ல ஏதாவது... சரி... அப்புறம் என்ன ஆச்சு?"

"என்ன ஆகும். கீழ போட்ட மீன் மண்டைய நாய் தூக்கினு போச்சாம்!"

**சதீஷ்:** **இளம்பெண்:**

கடவுளே

என்னை மணப்பவர் புத்திசாலியாக அமைய வரம் கொடு.

**கடவுள்:** புத்திசாலிகள் கல்யாணமே செய்து கொள்வதில்லை மகளே.

**நமீலா அனீப்:**

**பெண்:** என் கணவர் ஐந்து நாட்களுக்கு முன் உருளைக்கிழங்கு வாங்குவதற்காக மார்க்கெட் சென்றார். ஆனால், அவரை இன்னும் காணவில்லை.

**காவலாளி:** அப்படி என்றால் நீங்கள் வேறு ஏதாவது சமையுங்களேன்.

**வளர்மதி:**

ஓர் இளம் காதல் ஜோடி தற்கொலை செய்துகொள்ள முடிவெடுத்தது. காதலன் மலை உச்சியிலிருந்து முதலில் விழுகிறான். காதலி, கண்ணை மூடிக்கொண்டு, 'காதலுக்குக் கண் இல்லை' என்று சொல்லிவிட்டுத் திரும்பிவிடுகிறாள். உடனே காதலன் ஒரு பாரசூட்டில் பறந்து வந்து 'காதல் என்றுமே சாவதில்லை' என்கிறான்.

**நிலவு:** உன் நண்பன் உனக்கு மெஸேஜ் அனுப்பவில்லை என்றால் அவனது நட்பை ஏன் விடக் கூடாது?

**நான்:** நீ ஒருநாள் வானில் தோன்றவில்லை என்பதற்காக வானம் என்ன உன்னை விட்டுவிடுகிறதா?

SMS கலாய்ப்பு முடிந்த நிலையில் குறுக்கிட்டார் கணேஷ்.

"எனக்கும், அப்துல்கலாமுக்கும் ரொம்ப ரொம்ப முக்கியமான ஒற்றுமை ஒண்ணு சொல்லுங்க... பார்க்கலாம்" என்றார் சீரியஸாக.

'சொந்த ஊர் ராமேஸ்வரம்' என்று தொடங்கி மொக்கையான பல யோசனைகள் தோன்றின. எல்லாற்றையும் மறுத்த கணேஷ் சொன்னார்:

"நானும் அவருக்கு SMS அனுப்பமாட்டேன். அவரும் எனக்கு அனுப்பமாட்டார்."

எல்லோரும் கணேஷைச் சூழ்ந்து நின்று 'பப்பி ஷேம்', 'பப்பி ஷேம்' என்று கேலி செய்தனர்.

"போன வருஷம் நடந்த farewall party-ல ஒவ்வொரு professorக்கும் நல்ல பரிசுப் பொருள் ஒண்ணு கொடுக்கணும்னு நினைச்சோம். குள்ளமான ஒருவருக்கு காம்ப்ளான் கொடுக்கலாம்னு நினைச்சோம். தப்புத் தப்பா மேத்ஸ் சொல்லிக் கொடுப்பவருக்கு எல்.கே.ஜி. டூ பி ஹெச்.டி வரைக்கும் உள்ள கணக்கு புஸ்தகங்கள் வாங்கிக் கொடுக்கணும்னு நினைச்சோம். நரைச்ச தலைமுடியோட வருபவருக்கு டை, ஒல்லியானவருக்கு ஹார்லிக்ஸ், தப்புத்தப்பா இங்கிலீஷை விடாமல் பேசுபவருக்கு ஸ்போக்கன் இங்கிலீஷ் புக் என இப்படி எங்க லிஸ்ட் நீண்டு போச்சு" என ஜாலியாக நினைவு கூர்ந்தவர்கள், எங்கே நம் கையில் மைக்கைக் கொடுத்து கும்மியடித்து விடுவார்களோ என்ற பதட்டத்தில் பட்டென்று சிட்டானோம். விடு ஜூட்...

**- நளினி சம்பத்குமார்**

படங்கள்: **குமார்**



# மறதி மன்னார்சாமி

"மன்னார்சாமியை திடீர்னு பேசச் சொன்னதும் திருதிருன்னு விழிச்சாரே ஏன்?"

"இப்போ எந்தக் கட்சியிலே இருக்கோம்கிறதையே மறந்துட்டா ராம்."





"தளபதியாரே எதிரி மன்னனைவிட நான் பலசாலியா!"

"ஆம் மன்னா... அவனுக்கு வாள் சுழற்ற தெரியும். உங்கள் வேகத்துக்கு ஓடி வர முடியாது!"



"எதுக்குடி ஒரே நேரத்துல உங்க வீட்டுக்காரரு மூணு காரு வாங்கிருக்காரு."

"சுத்துக்கறதுக்கு ஒண்ணு; ரெகுலர் யூஸுக்கு ஒண்ணு; இரண்டும் ஆக்ஸிடெண்டு ஆனா யூஸ் பண்ண மூணா வது!"



"என்ன ஜோஸியரே... ஆளே இல்லாமலே கிளி சீட்டு எடுத்துக் கொடுக் குது..."

"எனக்குத்தான் பார்த் துக்கிறேன். இன்னைக்கு வருமானம் வருமா வரா தான்னுதான்."

சிரிப்புகள்: டி.சேகர்

# பேச்சின்பம்

பாட்டின்பம், கவியின்பம், காட்சியின்பம், கலையின்பம் முதலியவற்றைப் பற்றி எல்லாரும் அறிந்திருக்கிறோம். ஆனால், இதென்ன பேச்சின்பம் புதிதாயிருக்கிறதே! ஆமாம், பெயர் புதிது தான்; விஷயம் என்னமோ மிகப் பழக. மேற்கண்ட இன்பங்கள் எல்லாவற்றையும் பூரணமாய் அனுபவிப்பதற்கு இன்றியமையாத சாதனமாயிருப்பது பேச்சின்பமாகும்.

'பேச்சிலே என்ன இருக்கிறது? செயல், செயல் வேண்டும்' என்று சில பெரியோர் சொல்வார்கள். இதை அவர்கள் உண்மையாக உணர்ந்திருந்தால், இப்படிச் சொல்லியேயிருக்க மாட்டார்கள் அல்லவா? உண்மையில், செயலைவிடப் பேச்சிலேயே இன்பம் அதிகம் என்பதற்கு அவர்களுடைய மேற்படி பேச்சே போதிய அத்தாட்சியாகும்.

பெரிய விஷயம் எதற்கும் போக வேண்டாம். கேவலம் சர்க்கரைப் பொங்கல் அல்லது உளுந்து வடையை எடுத்துக் கொள்வோம். இவற்றைப் பற்றிப் பேசும்போது எவ்வளவு ருசியாயிருக்கிறது? சீரகச் சம்பா அரிசியைப் பாலில் வேகவைத்து, அதில் பதமாகக் காய்ச்சிய வெல்லப் பாகைவிட்டு, குங்குமப் பூவையும் போட்டுக் கிளறினால், அடடா! நாவில் ஜலம் சொட்டுகிறது. உளுந்தை வழுவழுவென்று அரைத்து, இஞ்சியும் பச்சை மிளகாயும் வெங்காயமும் பொடிப்பொடியாக நறுக்கிப்போட்டு, வெண்ணெய் காய்ச்சின நெய்யில் கையகலம் வடை தட்டினால் கேட்பானேன்? பன்னிரண்டு வடையை முறித்துத் தள்ளிவிடலாமென்று தோன்றுகிறது.

ஆனால், உண்மையில் அவற்றைச் செய்யத் தொடங்கும்போது பால்காரர்களின் அநியாயம், வெண்ணெய் காய்ச்சின நெய்யின் அருமை, பாங்கிக் கணக்கின் நிலைமை, மகசூல் கம்மி, வரிகளின் உயர்வு, சர்க்கார் சிக்கனம், சம்பளப் பிடித்தம், அஜீரணத்தின் உபத்திரவம், டாக்டர்களின் தொல்லை, கீதையின் உபதேசம், இயற்கையுணவின் மேன்மை முதலிய இவ்வளவு தடைகளும் வந்து குறுக்கிடுகின்றன. பேச்சுக்கும் செயலுக்குமுள்ள வேற்றுமையைப் பாருங்கள்.




பேச்சின் பெருமையை இன்னும் நன்கு அறியவேண்டுமானால் குழந்தைகளிடம் போகவேண்டும். குழந்தையின் மழலைச் சொல்லில் தாயார் இன்புறுவதை நான் இங்கே குறிப்பிடவில்லை. அதைப் 'பேச்சின்பம்' என்று சொல்லக்கூடாது. 'குழறலின்பம்' அல்லது 'உளறலின்பம்' என்று வேண்டுமானால் சொல்லலாம். சிறு பிள்ளைகளுக்

குள் ஒருவருக்கொருவர் மனஸ்தாபம் வந்தால், அவர்கள் கொடுக்கும் பெரிய தண்டனை என்ன? 'உன்னோடு பேசுவதில்லை, போ' என்பதுதான். சிநேகத்துக்கு அடிப்படை பேச்சு. பேச்சு இல்லாவிட்டால் சிநேகமில்லை.

சுமார் இரண்டு வருஷங்களுக்கு




முன்பு ஒருமுறை பத்து ரூபாய் செலவில் ஐந்து நிமிஷம் தேவ பதவி பெறும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. 'கராச்சி காங்கிரஸுக்குப் போனேன்; அங்கே ஆகாய விமானம் ஏறினேன்' என்று எப்பொழுதுமே சொல்லிக் கொண்டிருக்கலாமே என்பதை உத்தேசித்து மேற்படி காரியத்துக்குத் துணிந்தேன். 'மோனோபிளேன்' எனப்படும் அந்தச் சிறு விமானத்தில் விமான ஓட்டியைத் தவிர ஒருவர்தான் உட்காரலாம். முன்னும் பின்னுமாக அதில் இரண்டு சிறு குழிகள் இருந்தன. முன் குழியில் நானும், பின் குழியில் விமான ஓட்டியும் உட்கார்ந்தோம். நடுவில் மறைப்பு இருந்தபடியால் உட்கார்ந்தபடி திரும்பிப் பார்த்தால் அவன் முகம் எனக்குத் தெரியாது.

விமானம் பூமியிலிருந்து கிளம்பி தாவித் தாவி ஆகாயத்தில் எழும்பலாயிற்று. ஒவ்வொரு தடவை அது தாவிய போதும் செத்துப் பிழைத்ததாக நினைத்தேன். ஆனால், சுமார் 300 கஜ உயரம் கிளம்பிய பிறகு விமானம் நேராகப் பறக்கத் தொடங்கியதும், ஆஹா! இந்த ஆனந்தத்தைச் சொல்லி அனுபவிக்க பக்கத்தில் ஒருவருமில்லையேயென்ற துக்கம் உண்டாயிற்று.

கடற்கரை மைதானத்திலிருந்து கிளம்பிய ஆகாய விமானம் சுமார் ஐந்து மைல் தூரம் பறந்து காங்கிரஸ் நகருக்கு மேலாக வந்தது. அந்த அற்புதக் காட்சியை நான் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தபோது, தலைமீது 'பட்' என்று ஓர் அடி விழுந்தது. திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தேன். ஒரு கை மட்டும் தெரிந்

மைக் கார்னர்

"ஓடாத கடிகாரம்கூட ஒரு நாளில் இரண்டு தடவை மிகச் சரியாக நேரத்தைக் காட்டும்போது, ஆறறிவு பெற்ற நாம் நினைத்தால் பலப்பல சாதனைகளைச் சொந்தமாக்கலாம்.''

- எல்.ஐ.சி. முகவர் பயிற்சி முகாமில் கேட்டவர்

நெல்லை. குரலோன்






பேச்சின்பத்துக்கு முதலாவது இன்றியமையாத சாதனம் என்னவென்றால், உங்களுடன் பேசுவதற்குத் தயாராயிருக்கும் மனிதர்கள்தான். தனக்குத்தானே சம்பாஷித்துக்கொள்வதில் இன்பமில்லையென்று நான் சொல்லவில்லை. ஆனால், அத்தகையவர்கள் விரைவில் சென்னைக் கீழ்ப்பாக்கத்தில் உள்ள பிரசித்தமான சர்க்கார் விடுதிக்குப் போய்ச் சேர நேரிடும். இந்த விடுதியில் மட்டும், தனக்குத்தானே பேசிக்கொள்ள எல்லோருக்கும் பூரண பாத்யதை உண்டு. மற்ற இடங்களில் சகோதர மனிதர்களுடனே சம்பாஷிப்பதுதான் மரபு.

சகோதர மனிதர்களிலுங்கூட நாம் நினைத்தவர்களோடெல்லாம் பேச முடியாது. உதாரணமாக, முஸோலினி பெரியாருடனும், மகாத்மா சர்ச்சிலுடனும், ஸ்ரீமான் ஹிட்லர்ஜியுடனும், திருவாளர் ரூஸ்வெல்ட்டுடனும் அனேக விஷயங்கள் நமக்குப் பேசுவதற்கு இருக்கலாம். ஆனால், அவர்கள் நம்முடன் பேச வருவார்களா? ஒருநாளும் நம்ப முடியாத காரியம்.

அதுபோலவே, அடுத்தாத்து சேஷிப் பாட்டியும், எதிர்வீட்டு இருமல் தாத்தாவும்

தது. அது விமான ஓட்டியின் கையென்று சுலபமாகத் தெரிந்துகொண்டேன். அந்தக் கை கீழே சுட்டிக்காட்டியதிலிருந்து காங்கிரஸ் நகரைப் பார்க்கும்படி அவன் எனக்குச் சொல்கிறான் என்று அறிந்தேன். அந்தச் சந்தர்ப்பத்தில் நீங்களாயிருந்தால் என்ன செய்திருப்பீர்கள்? 'இவன் என்ன காங்கிரஸ் நகரைப் பார்க்கும்படி நமக்குச் சொல்வது? அப்படிச் சொல்வதாயிருந்தாலும், அதற்காகத் தலையில் அடிக்கவாவது? சுத்த போக்கிரித்தனம்! இந்தப் பயலுடைய விமானத்தில் இனி அரைக்கணம் கூட இருப்பதில்லை!' என்று தீர்மானித்து ஆயிரம் அடி உயரத்திலிருந்து நேராகக் கீழே குதித்திருப்பீர்களோ, என்னமோ? இத்தகைய சுயமரியாதை உணர்ச்சி அப்போது எனக்கொன்றும் ஏற்படவில்லை. ஆஹா! கண்ணுக்குத் தெரியாவிட்டாலும் பேசுவதற்கு ஓர் ஆள் இருக்கிறானே என்ற உவகைதான் பொங்கிற்று. 'தேக்கா! தேக்கா! கூட தேக்கா!' என்று விமான எஞ்சின் சத்தத்தையும் மிஞ்சிய குரலில் கத்தினேன். இரண்டொரு ஹிந்தி வார்த்தைகள் தெரிந்திருந்தது சமயத்தில் எவ்வளவு கை கொடுத்தது பாருங்கள்! அந்தச் சமயத்தில் அந்த வார்த்தைகளை மட்டும் நான் பேசியிராவிட்டால், என்னுடைய விமானப் பிரயாணம் இன்பகரமானதாகவே தோன்றியிராது.



இரவு பகல் இருபத்து நான்கு மணி நேரமும் உங்களுடன் சம்பாஷிக்க விரும்பலாம். ஆனால், உங்களுக்கு அது விருப்பமாயிராது. ஆகவே, நாம் சம்பாஷிப்பதற்குரிய மனிதர்கள் யார் என்பதை முதலில் கண்டு பிடிக்க வேண்டும்.

ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு விஷயத்தில் ருசி. சுப்பண்ணாவுக்கு அரசியல் சமாசாரங்களைப் பற்றிப் பேசுவதென்றால் பிடிக்கும். 'என்ன ஸார்! இன்று பத்திரிகையில் வித்தல்பாய் பட்டேல் என்ன போடு போட்டிருக்கிறார், பார்த்தீர்களா?' என்று கேட்பதற்காக, அவர் குப்பண்ணாவைத் தேடிக்கொண்டு செல்கிறார். குப்பண்ணாவுக்கோ அவரைக் கண்டதும் பரம சந்தோஷம். 'ஆமாம், மிஸ்டர் சுப்பண்ணா! இந்த சாஸ்திரியும், சாப்ரூவும் வாயை மூடிக் கொண்டு சும்மா இருக்கக் கூடாதா? ஏன் இப்படி உளறு உளறு என்று உளறிக் கொட்டுகிறார்கள்?' என்பதாக ஆரம்பித்து விடுகிறார். இவ்விருவரும் பேச்சில் புகுந்து விட்டால், வாயில் 'ஈ' புகுந்தது தெரிவதில்லை.

ரங்கசாமிக்கு இலக்கியங்களில் பிரேமை. பொன்னுசாமிக்கும் அப்படியே. இருவரும் சந்தித்துவிட்டால் போதும். கம்பனுடைய பாட்டில் ஒரு அடியில் ஒரு சொல்லின் சுவையைப் பற்றிப் பேசத் தொடங்குகிறார்கள். அவ்வளவுதான். புயல், பூகம்பம் இரண்டும் சேர்ந்தால்கூட, அவர்களை அந்தப் பேச்சிலிருந்து வேறு விஷயத்துக்குத் திருப்ப முடியாது.

சீட்டாட்டப் பிரியர்கள் இருக்கிறார்கள் 'நான் இஸ்பேட்டைத் தள்ளினேன். அவன் கிளாவரை எறிந்தான். இரட்டை ஆஸை அடித்து என்ன சொல்கிறாய் என்றேன்' என்று சுவாரஸ்யமாகப் பேசிக்கொண்டிருப்பார்கள்.

கிரிக்கெட் அபிமானிகள் ரஞ்சி, நாயுடு, படோடி முதலிய திருநாமங்களையும், சினிமாப் பிரேமிகள் சார்லி, நெவாரோ, பெயர் பாங்ஸ், பிக்பேர்டு, கோஹர் முதலிய பெயர்களையும் ஜபம் செய்துகொண்டிருப்பார்கள்.

இந்தக் கோஷ்டிகளில், அவரவர்களும் தத்தமக்குரியதைத் தேர்ந்து கொள்ள வேண்டும். இடமில்லாத இடத்துக்குப் போய்ச் சேர்ந்தால் ஆபத்துதான். உதாரணமாக, நீங்கள் இலக்கிய கோஷ்டியைச் சேர்ந்தவரென்று வைத்துக் கொள்வோம். கலிங்கத்துப் பரணியின் கவிதை இன்பத்தில் நீங்கள் கழுத்து வரை இறங்கி நீந்திக் கொண்டிருக்கும்போது, திடீரென்று ஒருவர், 'ஏன் ஸார்! மலையாளத்திலே மிளகு என்ன விலை?' என்று கேட்டால் உங்களுக்குக் கோபம் வருமா, வராதா?




பேச்சின்பத்தின் முக்கியமான அடிப்படை விதியை இப்போது அறிந்து கொண்டு விட்டீர்கள். என் விதிகளின் உதவியில்லாமலே பேச்சின்பத்தை நீங்கள் அனுபவிப்பதாயிருந்தாலும், எனக்குச் சம்மதந்தான்.

**(- ஆனந்தவிகடன், 15.12.1932)**

# மாடர்ன் ஆர்ட்



● மனுஷனுக்கும் பறவைக்கும் இருக்கிற உறவு ரொம்ப ரொம்பப் பழசு. (நம்ம சாமிக்குக் கூடத்தான் முருகனுக்கு மயில், மீனாட்சி கையில் கிளி, விஷ்ணுவுக்குக் கருடன்...) ஒரு பறவை கெடச்சாலும் சுட்டுத் திங்கற நம்ம ஆளுங்க மத்தியில... கூந்தன்குளம் தேடி எங்க இருக்கிற பறவையும் அங்க வந்து தங்கறதால கிராம மக்களே அதைக் காப்பாத்தறாங்க. திருவிழா, தீபாவளி, சாவு எதுக்கும் அங்க பட்டாசு வெடிக்க முடியாது. முடியாதில்ல - கூடாது. எந்த வேறுபாடுமில்லாம மனு ஷங்ககிட்ட பறவைங்க அன்பாயிருக்கு. அட அந்தக் கிராம மனுஷனுக்கே றெக்கை முளைக்க ஆரம்பிச்ச மாதிரி ஒரு கற்பனைதான் இது.



● மத்தியான வேளையில் குளத்தில தனியா குளிக்கக்கூடாதுங்கிறது கிராம வழக்கு. நீர் தேவதை இழுத்துக்கிட்டு போயிரும்ன்னு. மீறி குளிக்கிறவங்க செத்ததாவும் தகவல். இந்த வார்த்தை பயமா மாறி மனசில பதுங்கிக்கும். மீறி தனியா குளிக்கறப்ப குளத்தின் தனிமையும் நீரின் கதகதப்பும் மனசின் பயத்தை வெளிப்படுத் திடும். அந்தப் பயம் நீச்சலை நிறுத்திப்புடும். உன்னால நீந்த முடியாது. ஆக குளம் சாகடிக் கல. நம்ம மனசில இருந்த பயமும் ஊர்க்காரங்க உருவாக்கியிருந்த நம் பிக்கையும்தான், நீந்த முடியாம நம்மள கட்டிப் போட்ட கயிறுன்னு, சொல்லாம சொல்றதுதான் இந்த மாடர்ன் ஆர்ட்.

ஓவியங்கள் : K.நடராஜன்

கருத்து : அமிர்தா

# இதுக்கு என்ன அர்த்தம்?

● இயற்கையின் பசுமை மேகமாக மாறி ஒரு மனுஷி ரூபத்தில வந்திறங்க, அதன் சுட்டுவிரலைப் பிடித்து வருங்கால சந்ததி நடைபயிலணுங்கறது இயற்கையை நேசிக்கிறவங்க ஆசைதானே. அதுதான் இது.



● நம்ம வாழ்க்கையில எல்லாப் பக்கத்திலேயும் இருக்கிறது பாம்புதான். பாம்புன்னா நிஜ பாம்பு இல்ல. செக்ஸுக்கும், பழிவாங்கறதுக்கும், மருத்துவத்துக்கும், ஐம்புலன்களுக்கும், மந்திரத்துக்கும், துயரத்துக்கும், பக்திக்கும் ஒரு குறியீடாக இருக்கிறது பாம்பு. இது இல்லாத வாழ்க்கை எது? இந்தப் பாம்பை அடக்கறதும் (எதிர்ப்பதும்); நாமளே விரும்பி அதன் வாயில நுழையறதும் நடந்துக்கிட்டேதான் இருக்கு - சரிதானே? இப்பப் பாருங்க ஓவியத்தை.

# டுயட் கதை-7

# ''தேன்...தேன்...தேன்... உனைத் தேடி அலைந்தேன்...''

## தாண்டவக்கோன்

'தேன் தேன் தேன்... உனைத் தேடி அலைந் தேன்...'

- அது சுபாவுக்கான ரிங்டோன். எம்.டி. பேச் சுக்குத் தலையாட்டிக் கொண்டிருந்த மனோஜ், செல்லை எடுத்து ஊமை யாக்கி விட்டு மீண்டும் தொடர -

'தேன் தேன் தேன்... உனைத் தேடி அலைந் தேன். உயிர்த் தீயை அணைத்தேன். சிவந் தேன்.'

'அடங்காப் பிடாரி...' என்று முணகிக்கொண் டவன், எம்.டி.யிடம் 'ஒன் செகண்ட்' என்று காட்டி விட்டு வெளியே வந்தான்.

'தேன்...தேன்...தே...'

''சுபா... பாஸ்கூட மீட் டிங்ல இருக்கேன்... இன் னைக்கு நாம சந்திக்க முடி யாது... ஓ.கே...''

''ஏய்... உதைப்பேன்... உனக்குப் பத்தே நிமிஷம் டைம்... கிளம்பி, கஃபே கார்னருக்கு வர்றே நீ...''

''ப்ளீஸ் சுபா... பாஸ் நாளைக்கு ஃபாரின் போறார். நான்தான் சார்ஜ் எடுத்துக்கணும்.''

''உன்னோடதில் கடைசி ஏழுக்குப் பதிலா ஒன்பதைப் போட்டுக்கிட்டா, உன் பாஸ் நம்பர்தானே...''

''அடியேய் விளையாட்டா...?''

''டுடிடிங்...''

- துண்டித்து விட்டாள் சுபா. இனி அதகளம் பண்ணப் போகிறாள்... 'ஷிட்'டென்று சுவரைக் குத்தி னான்.

சுபாவோடு பழக ஆரம்பித்து தொண்ணூற்றிச் சொச்ச நாளாகிறது. மின்சார ரயிலில் சுபாவை எதிர் கொண்ட அந்த வசந்த விநாடி யிலிருந்தே, மனோஜினுள் மத்தாப் புக்கள் மின்னி தீபாவளி காட்டின.

அவனது ஸ்கேனிங் பார்வைக்கு முதலில் அசராத சுபா, சுமார் ஒரு வார லேசர் வீச்சில் சாய்ந்துவிட்டாள். பழகும் வரை பச்சிலையாய்க் கசந்தவன் பின்பு பாதாம்கீராய் மாறிப் போனா னென்றாலும், சுபாவின் ஓவர்டோஸ் சுபாவத்தால் கொஞ்சம் அலர்ஜி யாகியிருந்தான் மனோஜ்.

உள்ளே பஸ்ஸர் கிர்ர்ர்ர, ஓடினால் பாஸ் ரேடியோ விளம்பரம்



போல கடகடவெனப் பேசினார்...

''செல்லை எடுத்தாக் கீழ வைக்கமாட்டியா... மனோ? லைன் கிடைக்காம உன் மாமா பொண்ணு எனக்குக் கூப்பிட்டா... அவங்கப்பாவுக்குக் கஃபே கார்னர்கிட்டே ஆக்ஸிடென்ட்டாம். உடனே ஓடு...''

இன்னொருமுறை 'அடங்காப்பிடாரி' என முனகிக் கொண்டு கிளம்பினான் மனோஜ்.

ஒருவேளை, தானொரு தப்பான பெண்ணிடம் அகப்பட்டுவிட்டோமோ என்று மனோஜினுள் ஒரு அடிக்கோடிட்ட சந்தேகம் நெளிந்தது. சுபாவும் அப் படித்தான் ஆட்டிவைத்



தாள். எதிலும் அவள் நினைத்தால் நினைத்ததுதான்; சொன்னால் சொன்னதுதான்.

ஒருமுறை காய்ச்சலோடு இருந்தவனை வந்தே தீர வேண்டுமென்று தசாவதாரம் இழுத்துப் போய் விட்டாள். பிறகொருதரம் ஆஃபீஸில் ஆடிட்டிங் நடந்த சமயம் தீம் பார்க் போயாக வேண்டுமென்று சாதித்தாள். இன்னும் அநேகம் சொல்லலாம். வாழ்க்கை முழுதும் அவளின் இழுப்புக்கு இப்படியே மாரத்தான் ஓட முடியுமா... தெரியவில்லை. நல்லவேளையாக, அத்தனை நாள் பழகியும் அவளிடம் இன்னும் 'லவ்' சொல்லிக்கொள்ளாதது மனோஜுக்கு ஆறுதலாகவே இருந்தது. ஏனெனில் தேவைப்பட்டால் அந்தப் பழக்கத்துக்கு வேறு முலாம் பூசி நட்பாக்கிவிடலாம் என்றும், அவனுள் ஒரு திட்டம் எடிட்டிங் டேபிள்வரை வந்துவிட்டது. இதோ அது அநேகமாய் கஃபே கார்னரில் ரிலீஸாகலாம்.

''ஏன்யா, நான் உன் வீட்ல திருட வந்ததுக்கு, உன் பொண்டாட்டி உன்னைப் போட்டு இப்படி அடிக்கிறாளே...''

'' அவ அப்படித்தான்... யார் மீது கோபம் வந்தாலும் அதை என்கிட்டேதான் காண்பிப்பா...''

- சேகர்



கஃபே கார்னர் இருக்கையில் 'உர்'ரென்றிருந்தாள் சுபா. எதிரில் உட்கார்ந்து காஃபியை வாயிலும் சுபாவைக் கண்ணிலுமாக உறிஞ்சிக்கொண்டிருந்தான் மனோஜ்.

''என் ஃபோனைக் கட் பண்ற அளவுக்கு வந்திட்டே.... இல்லே மனோ...?''

''ஸாரிப்பா...'' - குடித்துக்கொண்டிருந்த காஃபியின் சூடுகூட வார்த்தையில் கலந்து விடக்கூடாதென்று கவனமாகக் குழைந்தான். அவனது கிரீஸ் தடவிய ஸாரிக்கு, சிரிப்புத் துணுக்குப் படித்தவன்போல சின்னதாய்ச் சிரித்தாள் சுபா. அவனுக்கோ புயல் கரையைக் கடந்துவிட்ட குஷி.

''நாம பழகி, வர்ற ஞாயிறோட நூறு நாளாகுது... மனோ...''

''ஆமாம்... இல்லே?''

''இன்னும் நாம பழகறதுக்கு என்ன அர்த்தம்னே தெரியலையே...?''

'காதல்' எனலாமாவென யோசித்தவனுக்கு மாரத்தான் ஓட்டம் நினைவு வரவே, எதுவும் சொல்லாமல், சுபாவையே சும்மா பார்த்துக்கொண்டிருந்தான்.

''நூறாவது நாள்ல, காந்தி பார்க்கில் வெச்சு என் மனசை எழுதித் தரலாம்னு இருக்கேன் மனோ...''

ஃபோட்டோ மாதிரி உட்கார்ந்திருந்தான் மனோஜ்.

''நாளைக்கு நாம கோயிலுக்குப் போறோம்... நீ லீவு போட்டுடு...''

- ஃபோட்டோ கலங்கி நெகடிவ் ஆனது. ''முடியாது சுபா, பாஸ் ஊர் திரும்பற வரைக்கும் எனக்கு லீவு கிடைக்காது...''

''போய் இன்னொரு காஃபி கொண்டாயேன்...?''

மனோஜ் போய் - வரிசையில் நின்று- டோக்கன் வாங்கி - வரிசையில் நின்று - காஃபி வாங்கி வந்த போது, அவன் செல் ஒலித்தது. எம்.டி.தான் பேசினார்.

''என்ன மனோஜ்... நீ... உன் மாமாவை இப்படியொரு நிலையில் விட்டுட்டு ஆபீஸ் வர நினைக்கலாமா? அந்தப் பொண்ணு மறுபடியும் ஃபோன் பண்ணி அழுதா... இங்கே எல்லாம் நான் பாத்துக்



கறேன்... உனக்கு நாளைக்கு லீவு....''

எதிரே, 'அசத்தப் போவது யாரு'க்காகச் சிரிப்பது போல் சிரித்துக்கொண்டிருந்தாள் அடங்காப் பிடாரி... நூறாவது நாளைக் கடைசி நாளாக்கி விடுவதென்று முடிவெடுத்தான் மனோஜ்.

**நூ**றாவது நாள். காந்தி பார்க். மனோஜும் சுபாவும் ஊமைப்படம் ஓட்டிக் கொண்டிருந்தார்கள்.

''என் மனசை இதுல எழுதியிருக்கேன்... படி மனோ...''

சுபா நீட்டிய காகித மடிப்பை வாங்கிக் கீழே வைத்துவிட்டு, தன் தீர்மானமான முடிவை அறிமுகப்படுத்தி பத்து வரிக்கு மிகாமல் பேசினான் மனோஜ்...

நடுநடுவே. 'இழுக்கிற இழுப்புக்கெல்லாம் வர நானென்ன மனுஷனா... மாடா...?' 'உன்னைக் காதலிக்கறதுக்கு ஒரு பேயைக் காதலிக்கலாம்...', 'ஃப்ரண்ட்ஷிப்புக்குக்கூட லாயக்கில்லாத அடங்காப் பிடாரி நீ' போன்ற ஆயிரம் மெகா வாட் வார்த்தைகளைப் பாய்ச்சியும்கூட - சுபா பீங்கான் மாதிரி சொரணையற்றிருந்தது புரிபடவில்லை அவனுக்கு...

எனினும், எல்லாம் முடிந்ததற்கு அடையாளமாக மனோஜ் எழுந்து, அமைதி ஊர்வலம் போனான். சுபா தடுத்தாள்.

''என் லட்டரைப் படிக்காமப் போறியே மனோ...?''

''இல்லை. இனி அதைப் படிச்சு என்னாகப் போகுது... குட்பை.''

''எடுத்துப் படிடா... மடையா...'' - சுபா போட்ட போடில் -

வேகமாய் ஓடிக் குனிந்து அந்த லட்டரையெடுத்துப் பிரித்துப் படித்தால் -

'பொம்மைல கூட எனக்குத் தலையாட்டி பொம்மைன்னா ஆகாது. நான் வெச்ச எல்லா டெஸ்டிலும் நீ ஃபெயில்... இன்னிக்கு எனக்கு அடிக்டாகி வேலையைக் கெடுத்துக்கறவன்... நாளைக்கு வேறெதுக்கும் அடிக்டானேன்னா... என் கதி...? அதனால, நம்ம பழக்கத்துக்கு ஒரு அர்த்தமும் வேணாம் மனோ... குட்பை...''

லட்டரைப் படித்த மனோஜ் ட்யூப் லைட் போல் சிரிக்க, பார்வை சாக்பீஸால் நூற்றுக்கு நூறு போட்டுப் பாஸாக்கினாள் சுபா. மறுபடியும் காதல் படம் ஓடத் துவங்கியது. ○

இது தேறாது என்றது முதல் விமர்சனம். விக்டர் ஹியூகோவிடம் இருந்து இப்படி ஒன்றை எதிர்பார்க்க வில்லை என்றனர் தேர்ந்த இலக்கிய விமர்சகர்கள். இதையெல்லாம் யார் காசு கொடுத்து வாங்கிப் படிக்கப்போகிறார்கள் என்று உதடு பிதுக்கினார்கள் சக எழுத்தாள நண்பர்கள். ஒரு கவிஞராக விக்டர் ஹியூகோ அறியப்பட்டிருந்த சமயம் அது. 'இந்தா, ஒரு காவியம் வைத்துக்கொள்' என்று ஹியூகோ திடுதிடுப்பென்று கத்தை காகிதங்களை எடுத்து நீட்டியபோது, இலக்கிய உலகம் பின்வாங்கியது. ஒரு காவியமாக அல்ல, ஒரு நாவலாகவும் கூட அதை ஏற்றுக்கொள்ள அவர்கள் தயங்கி நிராகரித்தார்கள்.

கத்திரிக்கோல் போடாமல் அளித்தால் ஆயிரத்து இருநூறு பக்கங்களுக்கு ஐந்து பாகங்களாக நீண்டு விடும் நாவல் அது. இருநூறு பக்கங்களிலும் கிடைக்கிறது, சுருக்கப்பட்ட பதிப்பாக. ஜன்னல் வழியாக எட்டி வானத்தைப் பார்ப்பதற்கும் வீட்டை விட்டு வெளியில் வந்து அண்ணாந்து பார்த்து வானத்தை ரசிப்பதற்குமான இடைவெளிதான் இரண்டுக்கும். என்றாலும், அந்த இருநூறு பக்க புத்தகத்தை வாசித்தாலே 'லே மிஸரபிளி'ன் பிரமாண்டம் நம்மைச் சட்டென்று தாக்கிவிடுகிறது.

1815-ம் ஆண்டுக்கானது கதைக்களம். ஒரு துண்டு ரொட்டியில் இருந்து தொடங்குகிறது கதை. பசி என்னும் கொடும் நோயால் பாதிக்கப்படும் ழான் வால்ஜீன், தனக்காகவும் தன்னைச் சார்ந்திருப்பவர்களுக்காகவும் வேண்டி சில ரொட்டித் துண்டுகளைத் திருடிவிடுகிறான். இது சட்டம் - ஒழுங்கு பிரச்னை என்று சொல்லி பிரெஞ்சு அரசாங்கம் அவனைக் கைது செய்து சிறையில் அடைத்துவிடுகிறது. ஐந்து ஆண்டு சிறைவாசம் முடிந்து வெளியில் வந்துவிட்டாலும், அடுத்து என்ன செய்வது என்று வால்ஜீனுக்குத் தெரியவில்லை.

மீண்டும் திருடுகிறான். இந்த முறை ஒரு பாதிரியாரின் வீட்டில் இருந்து. சற்று விலையுயர்ந்த ஒரு பொருளை. எப்படியும் சிறை. எதற்கு ரொட்டியைத் திருடிக் கொண்டிருக்க வேண்டும்? அதிகாரிகள் விலங்கோடு ஓடி வருகிறார்கள். ஆனால் பாதிரியார் அவர்களைத் தடுத்துவிடுகிறார். 'ஐயா, இவர் நல்லவர். குறிப்பிட்ட பொருளை அவர் திருடவில்லை. அதை நான்தான் அவருக்கு அன்பளித்தேன்' என்கிறார்.

வால்ஜீன் இதை எதிர்பார்க்கவில்லை. அன்பும் நேசமும் முழுமுற்றாக இன்னமும் அழிந்துவிடவில்லையா? ஒரு திருடனான என் மீது ஏன்

# ஒரே ஒரு






# ரொட்டித்துண்டு

இந்தப் பாதிரியார் இரக்கம் காட்ட வேண்டும்? கேள்விகள் வால்ஜீனை மாற்றுகின்றன. ஆறு ஆண்டுகளில் புதிய மனிதராக, பளபளப்பும் மினு மினுப்பும் செல்வாக்கும் கூடிய முக்கியப்புள்ளியாக மாறுகிறார். முகம் தெரியாத பாதிரியாரிடம் இருந்து பெற்ற நேசத்தை, பிறருக்கும் பரப்பி விடும் துடிதுடிப்புடன் அமைதியாக இயங்கிக் கொண்டிருக்கிறார் வால்ஜீன். ஆனால் காவலாளிகள் சமூகம் மட்டும் இவரைக் குறுகுறுப்புடன் நிழலாகப் பின்தொடர்கிறது.

தனிப்பட்ட முறையில் தனக்கு என்று இனி வாழ்க்கை எதுவும் இல்லை என்பதில் தெளிவாக இருக்கிறார். ஒரு சிறுமியைத் தத்தெடுத்து வளர்க்கிறார். அவள் வளர்ந்து காதலிக்க ஆரம்பித்தபோது, அருகில் இருந்து அரவணைத்துக் கொள்கிறார். 'ஐயோ நீங்கள் ஒரு முன்னாள் குற்றவாளியா, சேச்சே... இது தெரியாமல் உங்கள் பெண்ணைக் காதலித்துவிட்டேனே' என்று மருமகன் முகம் சுளித்தபோது, புன்முறுவலுடன் தன் கதையை விவரிக்கிறார். சிறு சலனமும் இல்லாமல் இறந்து போகிறார். நாவல் முழுவதும் சமூகத்தை மட்டுமன்றி மதம், அதிகாரம் இவற்றையும் நம் முன் விரித்துச் செல்கிறார்.

பத்தொன்பதாம் நூற்றாண்டு இலக்கிய உலகம் லே மிஸரபிளை ஒதுக்கியதற்கு முக்கியக் காரணம், 'ஃபிரெஞ்சுப் புரட்சியை நான் ஆதரிக்கிறேன். ஒடுக்கப்பட்டவர்கள் திமிறி எழுவது சகஜமானது; இயற்கையானதும் கூட. கோபுரங்கள் மண் மேடுகளாக மாறும். மக்களை மதிக்காத அரசாங்கங்கள் கவிழும்; மண்ணைக் கவ்வும்' என்ற ஹியூகோவின் புரட்சிக் கருத்துக்கள்தான்.

'ஒரு நாவலில் என்ன உபதேசம் வேண்டிக் கிடக்கிறது?' என்று தோள்பட்டையைக் கன்னத்தால் இடித்து, லே மிஸரபிளைத் தூக்கிப் போட்டார்கள் ஃபிரெஞ்சு விமர்சகர்கள். 'கொடு கொடு' என்று இரு கரங்களால் அதை வாங்கிப் பத்திரப்படுத்திக்கொண்டது காலம். இன்று உலகில் உள்ள அத்தனை மொழிகளிலும், லே மிஸரபிளை மொழிபெயர்த்திருக்கிறார்கள். 'ஏழை படும் பாடு' என்னும் பெயரில் சுத்தானந்த பாரதியார் தமிழ்ப்படுத்தியிருக்கிறார்.

விக்டர் ஹியூகோவின் 'லே மிஸரபிள்' வானத்தை, ஜன்னலைத் திறந்து பார்ப்பதா? கதவைத் திறந்து வெளியே வந்து பார்ப்பதா? என நீங்களே முடிவு செய்து கொள்ளுங்கள். ●

மருதன்



# மாயாவதி ஒரு புதிர்!

**'பேஹன்ஜி' என்ற தலைப்பில் மாயாவதியின் வாழ்க்கை வரலாறு புத்தகமாக வெளிவந்துள்ளது. இருபத்தைந்து ஆண்டுகள் பத்திரிகை உலக அனுபவம் பெற்றிருக்கும் பத்திரிகையாளர் அஜய் போஸ் எழுதியுள்ளார். அவருடனான சென்னை சந்திப்பில்...**

**''உங்களுக்கு இந்தப் புத்தகம் எழுதும் எண்ணம் எப்படி ஏற்பட்டது?''**

''இந்தியாவின் பிரதான அரசியல் முகாம்களான காங்கிரஸ், சங் பரிவார், கம்யூனிஸ்ட்கள், சோஷலிஸ்ட்கள் ஆகிய நான்குடனும் தொடர்பில்லாத ஒரு அரசியல் சக்தி மாயாவதி. திருமணமாகாத பெண்மணியான அவருக்கும், அவரது அரசியல் குருவான கன்ஷி ராமுக்கும் இடையிலான உறவு குறித்த கேள்விகள் பல எழுப்பப்பட்டன. எல்லாவற்றையும் துணிச்சலுடன் எதிர்கொண்ட அவருக்கு, இன்று இந்திய அரசியலில் தவிர்க்கமுடியாத அளவுக்கு முக்கியத்துவம் ஏற்பட்டுள்ளது. இந்த சுவாரஸ்யம்தான் என்னைப் புத்தகம் எழுதத் தூண்டியது.

**''புத்தகம் எழுதுவதற்காக மாயாவதியிடம் அனுமதி வாங்கினீர்களா?''**

''இல்லை. என் எழுத்துச் சுதந்திரம் பாதிக்கும் என்பதால் மட்டுமன்றி, இந்நூல் அவரைத் துதி பாடும் புத்தகமாக அமையக்கூடாது என்பதற்காகவே அவரை அணுகவில்லை. அவருக்கு நெருங்கிய வட்டத்திலிருக்கும் பலரிடமிருந்து தகவல் பெற்று பாரபட்சமின்றி எழுதியிருக்கிறேன்.''

**''புத்தகத்துக்கு வரவேற்பு எப்படி இருக்கிறது?''**

''நன்றாக இருக்கிறது... வாசகர்கள் சந்திப்பில் மாயாவதி ஒரு சர்வாதிகாரியா? அவரது சொத்து மதிப்பு எவ்வளவு? என்று கேட்டார்கள். என் பதில்: சர்வாதிகாரத்தால் யாரும் ஆட்சிக்கு வந்துவிட முடியாது. சொத்துக்கள் பற்றி, புத்தகத்தில் ஒரு விரிவான அத்தியாயமே இருக்கிறது.''

**''மாயாவதி இந்தியாவின் பிரதமர் ஆக வாய்ப்பு இருப்பதாக நினைக்கிறீர்களா?''**

''இன்று காங்கிரஸும், பி.ஜே.பியும் சுருங்கி வருகின்றன. மாயாவதி வளர்ந்து வருகிறார். பிரதமராக வாய்ப்புக் கிட்டினால் - அது மிகக் குறுகிய காலத்துக்காக மட்டுமே என்றாலும் கூட, அவர் அந்த வாய்ப்பை நழுவ விடமாட்டார்.''

**''மாயாவதி பற்றி உங்களுக்குப் புதிரான விஷயம் எது?''**

''மாயாவதி சட்டம் படித்த, ஆங்கில அறிவு உள்ள தைரியசாலி. ஆனால் ஆங்கிலத்தில் பேசாமல் மொழிபெயர்ப்பாளர் ஒருவரைக் கூட வைத்துக்கொண்டுதான் பேசுகிறார். இது ஏன் என்று எனக்குப் புதிராகவே உள்ளது.

சந்திப்பு, புகைப்படம் : **மௌலி**

# மௌனம் பேசியதே!

ஆர்.ஸ்ரீநிவாஸ ராகவன்

கற்பகாம்பாள் சன்னிதியில் வந்து நின்றாள், கோதை.

பச்சை நிறத்தில் பட்டுப்புடைவை சாத்தியிருந்தார்கள். வெள்ளிக் கவசத்தோடு, ரோஜா மாலையும் அழகை பிரமாதப் படுத்தியது. 'என்ன சௌக்கியமா?' என்று நலம் விசாரிக்கிற முறுவல் துலங்கியது.

'ஒரு சன்னிதில வந்து நின்னா, இப்படித்தான் அந்த அழகைப் பார்க்கணும். பாரு. அந்தக் கண்ணுலதான் எவ்வளவு பிரியம்? 'தலைல கிரீடம் இருக்கு. நீ நிக்க, நான் உக்காந்திருக்கேன்' இற - அகம்பாவம் துளிக் கூட இல்லாத, கனிவு ததும்பற கோலத்தைப் பாரு. 'நீயும் இப்படித்தான் இருக்கணும்'னு பாடமாச் சொல்லாம, காட்சி கொடுக்கறா அம்பாள். பார்க்கும்போது மனசுக்கு இதெல்லாம் புரியணும்.

வந்தவுடனே கண்ணை மூடிண்டா என்ன அர்த்தம்? எதுக்கு வந்தே? இதோ இந்த ரூபத்தைப் பாக்கத்தானே வந்தே? கண் குளிர, மனசு நிறையப் பாரு.' ரகுவின் குரல் காதுக்குள் ஒலித்தது.

அவன் இப்படித்தான்.

வயசுக்கும் பேச்சுக்கும் சம்பந்தமே இருக்காது.

எந்த விஷயத்தை எப்படிப் பேசினாலும், அவனை மிஞ்ச முடியாது. குரலை உயர்த்தாமல், பேச்சிலேயே மடக்கிக் கட்டிப்போட்டு விடுவான்.

மணி ஒலித்தது. தீபாராதனையை தரிசித்தாள். சுற்றி நடந்தாள். மண்டபத்தின் தூணில் சாய்ந்து உட்கார்ந்தாள்.

சற்றுத் தள்ளி ஒரு ஜோடி உட்கார்ந்திருந்தது. புதிதாகக் கல்யாணம் ஆனவர்கள் மாதிரி தெரிந்தது. முகத்திலேயே வெட்கமும், அசட்டுச் சிரிப்பும் வழிந்தன.

''அட... உனக்கும் இப்படியெல்லாம் பார்க்கத் தெரிஞ்சிடுச்சு.''

ரகு கேலி செய்தது நினைவில் வந்தது.

''அப்படின்னா, என்னை 'முட்டாள்'னு சொல்றியா?''

''சேச்சே... நான் அப்படிச் சொல்வேனா?''

''ஓ... 'நீயே புரிஞ்சுக்கணும்'னு சொல்றியா?''

சத்தம் வராமல் சிரித்தான்.

அவன் வாய் விட்டுச் சிரிப்பதைவிட, கண்களால் சிரிப்பது இன்னமும் வசீகரமாய் இருக்கும்.

''ராஸ்கல், நீ என்ன பண்ணாலும் அழகாத்தான் இருக்கு. என்னைச் சுத்தமா மயக்கிட்ட... எதைப் பார்த்தாலும், எதைப் படித்தாலும், உன் ஞாபகம்தான்...''

''அப்படியென்ன பண்ணிட்டேன்?''

''உனக்கு எல்லாத்துலயும் இருக்கற இன்ட்ரஸ்ட்தான் என்னை மயக்கிடுச்சு. கவிதை, நாவல், தத்துவம், ட்ராயிங், மியூஸிக், பக்தி, டூர்னு எந்த விஷயத்தைப் பேசினாலும், அதைப் பத்தித் தெரிஞ்சிருக்கு. எல்லாரும் உன்கிட்ட பேசணும்னு தேடி வர்றாங்க. அவ்வளவு பேரையும் சந்திக்கிறே. அதேசமயம் 'எல்லாம் தெரியும்'கிற மாதிரியா நீ நடந்துக்கறதும் இல்ல. அதுதான் பெரிய ஆச்சர்யம்.''

கோதை பேசிக்கொண்டே போனாள். அதனால் எந்த பாதிப்பும் இல்லாதவனாகப் பேசினான் ரகு:

''எல்லாத்துலேயும் அழகு இருக்கு. ஆனா, ரசிக்கத் தெரிஞ்ச மனசுக்குத்தான் அது புரியும்.''

''அதோ...பூக்கட்டிண்டு இருக்காளே... அவளும் உன்னோட ரசனைக்குள்ள வருவாளா?''

''ஏன் இல்லாம... அவ கருப்பா, உதடு நீண்டு இருக்கறதால கேக்கறியா? அவ கையைப் பாரு.... கண்ணு எங்க பார்த்தாலும், விரல் பூ எடுக்கறதுல யும், தொடுக்கறதுலயும் இருக்கிற லாகவத்தைப் பாரு. அதுதான் அழகு!''

சுருக்கென்று குத்தத்தான் செய்தது.

''குறையைக் குறிப்பிடும் மன நிலைக் குக் காரணம், அங்கேயே குறை இருப் பதுதான். அங்கே குறை இல்லா விட்டால், நிறை புலப் படும்'' - பாடமாக



நடத்தாமல், பளிச்சென்று புரிய வைப்பான்.

''எப்பப் பார்த்தாலும் வேற விஷயத்தைப் பத்தியே பேசிட்டிருக்கியே... உனக்கு முன்னாலே நான் ஒரு ஜீவன் இருக்கேனே. அந்த ஞாபகம் இருக்கா?''

''ஏன் இப்படிக் கேக்கிற? என்கூட எப்பவும் இருக்கப்போறவ நீதான். அதனாலதான் உன்கிட்ட எல்லாத்தையும் சொல்லிட்டிருக்கேன்.''

''ஏய்.... என்ன சொன்ன? என்ன சொன்ன...?''

''என்கூட எப்பவும் இருக்கப் போறவ நீதான்னேன். அதுக்கென்ன?''

அவன் குரலில் இருந்த உரிமையும் திமிரும்கூடப் பிடித்தது. கடந்த ஒன்றரை வருஷப் பழக்கத்தில் ஒருநாள் கூட, ஒரு வினாடிகூட, ஓர் அசட்டுச் சிரிப்போ, ஓரக்கண் பார்வையோ அவனிடம் கிடையாது.

எப்போதும் கேலி, கிண்டல், சிரிப்பு என்று அமர்க்களப்படுத்துவான். அவனிடம் என்னுடைய விருப்பத்தைச் சொன்னால் அதற்கும் சிரிப்பானோ என்று பயந்திருந்தேன். ராஸ்கல்! காதலையும் எப்படிச் சொல்கிறான்?

''நிஜமாத்தான் சொல்றியா?''

''ம்.''

'இவ்வளவு நாள்ல ஒரு முழம் பூ கூட வாங்கித் தந்ததில்லையே நீ...!''

''வாடக் கூடியதையா நான் உனக்குத் தரணும்னு நினைக்கிறே... எப்பவும் உன்னோட வாழக்கூடியதா ஒண்ணு தர்றேன்...''

சட்டென்று அவள் கையைப் பற்றி இழுத்து, உள்ளங்கையில்...

'**வ**சீகரா...என் நெஞ்சினிக்க உன் பொன்மடியில் தூங்கினால் போதும்...'

காற்றில் மிதந்து வந்த பாடல் கவனத்தைக் கலைத்தது.

## காதல் வட்டப் பாதை!

உன்னில் தொடங்கி
உன்னில் விரிந்து
உனக்குள் முடியும்
என் காதல் வெளியில்
உன்னைவிட
வேறொன்றுமில்லை
அதிசயம்
உன் வட்டப் பாதையில்
சுற்றி வந்தே
உயிர் பெறுகின்றன
எனது பருவகாலங்கள்.

– அனாமிகா

எதிரே உட்கார்ந்திருந்த ஜோடியைக் காணவில்லை. இருளேறி விட்டது. எழுந்து நடந்தாள்.

சாலைகளில் நடப்பதுதான் இப்போது பயமாயிருக்கிறது. சரேலென்று பாய்ந்துவரும் டூ-வீலர்களைப் பார்க்கும் போதே கால்கள் வெலவெலக்கின்றன.

'எதுக்கும் பயப்படக் கூடாது. பயத்தால எதையும் தடுக்க முடியுமா? அழுகையால தடுக்க முடியுமா? ஏன் அதைச் செய்யற?'

'உனக்கென்ன? எதைப் பற்றிய பயமும் இல்லை. என்னால அப்படி முடியலப்பா.'



காற்றில் சுழற்றி எறியப்பட்ட பட்டம் மாதிரி வாழ்க்கை சிதறிப் போய்விட்டது.

ஹாஸ்டலின் உள்ளே நுழைந்தாள்.

எதிரே வந்த பெண் பேச ஆரம்பித்தாள். அவளைத் தடுத்த மற்றவள் சொன்னாள்:

''ஏய்... இன்னைக்கு மேடம் மௌன விரதம். பேச மாட்டாங்க.''

''ஏன்?''

''அவங்க ஹஸ்பெண்ட் இறந்த நாள்!''

இன்னொரு பெண் மறுத்தாள்.

''இல்லப்பா... கல்யாணத்துக்கு முன்னாலயே அவர் இறந்துட்டார்...''

ரூமினுள் நுழைந்த கோதை, டைரியைத் திறந்து எழுதினாள்.

''ரகு...

காலத்தினால் உன்னுடைய வசீகரம் குறையவில்லை. எப்போதும் உன் நினைவுகளோடுதான் வாழ்கிறேன். என்றாலும், இன்று உன் நினைவில் மட்டுமே வாழ்ந்தேன்.

வாடக்கூடிய பூக்களை உனக்குத் தர மாட்டேன். எப்பவும் உன்னோட வாழக் கூடிய ஒண்ணைத் தர்றேன்னு சொன்னே...

நிஜம்தான்...

எதையும் ரசிக்கிற மனநிலை; நல்லதைப் பகுத்துப் பார்க்கும் பார்வை; மியூஸிக்; கவிதை... இப்ப சொல்றேன். நான் முழுசா உன்கூட வாழறேன்.

குறிப்பா... உள்ளங்கை மட்டும்தான் அதிர்ஷ்டசாலி!''

டைரியை மூடிவிட்டு நிமிர்ந்தாள்.

ஃபோட்டோவினுள் ரகு சிரித்துக் கொண்டிருந்தான். ○

'முடியணும் கோதை... முடியணும்... எதுக்கும் பயம் கூடாது. நாளைக்குக் காலைல மரணம்னு தெரிஞ்சா, அதையும் சிரிச்சுக் கிட்டே ரசிக்கணும்.'

'ச்சீ... நீயும் உன் பாழாப்போன ரசனையும். போய் முதல்ல வாயைக் கழுவு.'

'நோ... இப்படி துடிக்கக்கூடாது. என்னோட லவ்ங்கறது ஆத்மார்த்தமானது. வெறும் பொஸஸிவ்னஸ் இல்ல. அதனாலதான், எல்லாத்தையும் இயல்பா ஏத்துக்க முடியுது; ரசிக்க முடியுது.'

''க்ரீச்...''

''யம்மா... நீ சாவ என் ஆட்டோதான் கிடைச்சுதா...?''

ஆட்டோக்காரரின் சீறலுக்குப் பதில் பேசாமல் நடந்தாள்.

ஏழு வருடங்களுக்கு முன் இதே நாளில்தான்...

லாரியில் கீழே சிக்கி வெறும் கூழாய்க் கிடந்தான் ரகு.

அழுவதற்கோ, கவலைப்படவோ, துடிக்கவோ பொழுதேயில்லை. சூறைக்

சொப்பு விளையாட்டு என்று ஒன்றை நம் முன்னோர்கள் சும்மா சொல்லி வைத்துவிட்டுப் போகவில்லை. அதனை அடிப்படையாக வைத்து வெளிநாடுகளில் மன வளர்ச்சி குன்றிய குழந்தைகளுக்கு சிறப்பு தெரபி கொடுக்கப்படுகிறது. வி.எக்ஸெல் சிறப்புப் பள்ளியில் ப்ளே தெரபி அளித்து வரும் திருமதி. வசுதா



* உளவியல் நிபுணர்...

ப்ரகாஷ், 'ப்ளே தெரபி'யின் அடிப்படை உளவியல் சிகிச்சையாய் இருப்பதை விவரிக்கையில்...

''இது போன்ற தெரபிகள் கேட்பதற்கு எளிதாக இருந்தாலும் நன்கு அனுபவம் வாய்ந்த உளவியல் நிபுணர்கள்தான் இது போன்ற தெரபிகளைக் கொடுக்கமுடியும். உள்ளங்கை அகலம் முதல் ஓரடி உயரம் வரையிலான பல்வேறு பொம்மைகளை வைத்து, குழந்தைகளை விளையாட விட்டு அவர்களைக் கூர்ந்து கவனிப்பார்கள். இது குழுக்களாகவும் தனித்தனியாகவும் கொடுக்கப்படும்.

சில ஆட்டிஸக் குழந்தைகள் ரூம் முழுக்க இறைந்து கிடக்கும் பொம்மைகளைக் கண்டாலே கத்தி அலறுவார்கள். பின் ஓடி ஓடி அதனைச் சேகரித்து வாரி அடுக்குவார்கள். இது சிறிது நாட்களுக்குத் தொடரும். பழகப் பழக ஒத்துக் கொள்ள ஆரம்பித்து விடுவார்கள். இது அவர்களுக்கு சமுதாயத்துடன் ஒத்துப்போக உதவுகிறது. சில குழந்தைகளின் முரட்டுத் தனத்துக்குப் பயந்து, வீட்டில் எந்தப் பொருளையும் தொட அனுமதிப்பதில்லை. இதனை வார்த்தையால் பரிமாறிக் கொள்ள முடியாத குழந்தைக்கு மன அழுத்தம் அதிகரித்து, அப்பொருட்களின் மேலேயே வெறுப்பு ஏற்பட்டு கண்ணில் கண்டதையெல்லாம் த்வம்சம் பண்ண ஆரம்பிக்கும்.

# ப்ராப்ளம்



இம்மாதிரியான குழந்தைகளின் மன அழுத்தம் குறைய, அறையில் பொம்மைகளை அடித்து நொறுக்க வாய்ப்பு கொடுத்து ப்ளே தெரபி கொடுக்கிறோம். பொம்மைகள் மூலம் மனப்பதிவுகளை ஆராய முடியும். குறைகளைத் தீர்க்க முடியும்.

ஒரு வாரமாக 10 வயது ஆட்டிஸக் குழந்தை ராகேஷ் தேவையில்லாமல் அழுது ஆர்ப்பாட்டம் செய்ய, டீச்சருக்குப் புரியவில்லை. அன்று அழைத்துப்போக வந்திருந்த அவனது அம்மாவும், 'கடந்த ஒரு வாரமாக இவன் தினமும் இரவு சரியாகத் தூங்குவதில்லை. அடிக்கடி பாத்ரூம் போய் வருகிறான். அவ்வப்போது என் முகத்தை வந்து உற்றுப் பார்க்கிறான்.

எனக்குப் புரியவில்லை' என்று எங்களிடம் சொன்னார். அன்று அவனது ப்ளே தெரபிஸ்ட், அவன் ஆசையுடன் கையில் எடுத்து வைத்துக் கொள்ளும் ஓரடி உயரமுள்ள மரத்தினாலான குதிரை பொம்மையின் முன்னங்கால் உடைந்திருப்பதைக் கண்டார். அவன்தான் உடைத்திருக்கிறான் என்றும் தெரிந்துகொண்டார்.

அடுத்த வகுப்பில் அதனை



# தீர்க்கும் 'ப்ளே தெரபி'

அவன் எளிதில் எடுக்கும்படி நடுவில் வைத்து விட்டு கவனிக்கத் தொடங்கினார். உள்ளே வந்தவன் வேகமாக அதனைக் கையில் எடுத்துக்கொண்டு நிற்க வைக்க முயற்சித்தான். கீழே விழுந்தது. ஆத்திரத்தில் ஓங்கி அடித்தான். இப்போது பல பாகங்கள் விண்டு கொண்டன. தெரபிஸ்ட் அதனைக் கையில் எடுத்துக்கொண்டு, 'குதிரையும் ஒரு தோழனும்' என்று ஒரு கதையை உருவாக்கிச் சொன்னார். அதில் ராகேஷ் சாயலில் இருந்த தோழன் குதிரையை அடித்துவிட்டதால் 'அவனைத் தூக்கிக்கொண்டு போக முடியாது' என்று குதிரை அழுதுகொண்டே சொல்வது போல முடித்தார். உடனே 'படக்'கென்று குதிரையைக் கையிலே பிடுங்கிக் கொண்டு 'சாரி... சாரி' என்றான். அருகிலிருந்த முதலுதவிப் பெட்டியிலிருந்து மருந்து எடுத்துத் தடவினான். பிறகு வெடித்து அழ ஆரம்பித்துவிட்டான். ஸ்ட்ரெஸ் முழுவதும் வெளி வரட்டும் என்று காத்திருந்த தெரபிஸ்ட், இப்போது குதிரைக்கு வீ என்று பெயரும் வைத்து, 'உடம்பு சீக்கிரம் சரியாயிடும். அப்புறம் சவாரி செய்யலாம்' என்று குதிரை சொல்வதாக முடித்தார். அதற்கு முத்தம் கொடுத்து வெளியேறினான் ராகேஷ்.

விஷயம் இதுதான். பொம்மையை உடைத்தது தவறு எனத் தெரிந்தாலும், அக்குதிரை முன்புபோல் இல்லை என்பதை ஒத்துக்கொள்ள முடியவில்லை. அதனை வார்த்தைகளால் வெளிப்படுத்தத் தெரியாததால்தான் மேலே பார்த்த செயல்கள். இப்படியாய்...

எண்ணங்களை வார்த்தைகளால் வெளியிட முடியாத இக்குழந்தைகளுக்கு இது போன்ற தெரபிகள் இன்றியமையாதது. இப்பிரச்னைகளை முளையிலேயே களையாவிட்டால், இக்குழந்தைகள், பெற்றோருக்கும் சமுதாயத்துக்கும் பெரும் பாரமாய் மாறிவிடும்.

முக்கியமாக குழந்தையின் பயம், தனிமை, தோல்வி, இயலாமை, விருப்பு, வெறுப்பு இவை அனைத்துக்கும் ப்ளே தெரபி ஒரு வடிகாலாய் அமையும்'' என்கிறார் திருமதி வசுதா ப்ரகாஷ்.

ம்ம்ம்... இது மாதிரி பெரியவங்களுக்கும் பொம்மை தெரபி இருந்தா நல்லாத்தான் இருக்கும்!

- சம்யுக்தா சங்கரன்

# அக்கம் பக்கம்

# தோனிக்கு நோட்டீஸ்— மீடியாவுக்குக் குட்டு!

**மை**சூரின் தசரா விழா உலகப் பிரசித்தி பெற்றது. தசராவுக்கு முன்னும் பின்னுமாக சுமார் இரண்டு மாதம் கர்நாடகாவில் இருக்கும் அனைத்து யானைகளும் மைசூரில் உள்ள அரண்மனை வளாகத் திடலுக்கு வந்து விடும். யானைகளுடன் வரும் யானைப்பாகன்களின் குழந்தைகள் இரண்டு மாதம் பள்ளிக்கூடம் போக முடியாதல்லவா? இந்தப் பிரச்னையைத் தீர்க்க, கர்நாடக அரசு புதிய திட்டம் ஒன்றை அமல்படுத்தியிருக்கிறது. அரண்மனையின் திடலில் யானைகள் தங்கும் இடத்துக்குப் பக்கத்திலேயே கூடாரங்கள் அமைத்து, தற்காலிகமாக பள்ளிக்கூடமே ஏற்படுத்தி விட்டார்கள். அப்பாக்கள் யானைகளை கவனித்துக் கொள்ள, குழந்தைகள் தினமும் காலை முதல் நண்பகல் வரை பாடம் படிக்கிறார்கள். மதிய உணவும் வழங்கப்படுகிறது.

**க**ர்நாடகா திரைப்பட சென்சார் போர்டு அண்மையில் இரண்டு நாள் கருத்தரங்கம் ஒன்றை மைசூரில் நடத்தியது. பிராந்திய சென்சார் அதிகாரி, ''கன்னடத் திரைப்படங்களில் செக்ஸ''ம், வன்முறையும் அதிகரித்துவிட்டன; ஒரு குறுகிய வட்டத்துக்குள்ளே இருந்துகொண்டு, வெளியே வரவே மாட்டேன் என்கிறார்கள்; திரைப்படத்துறையினர் பொறுப்புணர்வுடன் படம் எடுக்கவேண்டும்'' என்று சொன்னார். கர்நாடகத் திரைப்பட வர்த்தக சபைத் தலைவரான நடிகை ஜெயமாலா ''சினிமா பற்றி தெரிந்தவர்களையும், புரிந்தவர்களையும் சென்சார் போர்டு உறுப்பினர்களாக நியமிக்க வேண்டும்'' என்று காட்டமாகக் குறிப்பிட்டார்.





❀ தோனி

செமினாரில், 'விதிகளின்படிதான் சினிமாக்களில் காட்சிகள் வெட்டப்படுகின்றன, அதை மீடியா சென்ஸேஷன் ஆக்கக்கூடாது' என்று மீடியாவினரது தலையிலும் குட்டு வைக்கப்பட்டது.

**கி**ரிக்கெட்டர் தோனி புகழ் ஏணியில் கீழ்த்தளத்

தில் இருந்தபோது, மைசூர் சாண்டல் சோப் தயாரிப்பாளர்கள், அவரைத் தங்கள் பிராண்ட் அம்பாஸடராக நியமித்து, விளம்பர மாடலாக வும் ஒப்பந்தம் செய்தார்கள். ஆனால் சீக்கிரமே தோனி புகழின் உச்சத்துக்குப் போய்விட்டார். இப்போது மைசூர் சாண்டல் கம்பெனிக்கும் தோனிக்கும் இடை யில் பிரச்னை. 40 லட்சம் ரூபாய் நஷ்டஈடு கேட்கும் கம்பெனியின் லீகல் நோட்டிஸுக்கு, தோனி தரப்பி லிருந்து பதில் இல்லை. ''உடனடியாகப் பதில் தராவிட்டால் கடுமையான விளைவுகளைச் சந்திக்கவேண்டி யிருக்கும்'' என்று தோனியை எச்சரித்துள்ளது கோர்ட்.


* தசரா விழா

இரண்டு சந்தேகங்கள் : மே.வங்காளத்திலிருந்து டாடாவின் நானோ கார் தொழிற்சாலை புராஜெக்ட் வாபஸ் ஆகுமா? ஆகாதா? வாபஸ் ஆகும்பட்சத்தில் இரண்டு சந்தேகங்கள் : டாடா நிர்வாகம் தனது புதிய தொழிற்சாலையை எங்கே ஆரம்பிப்பார்கள்? மகாராஷ் டிராவிலா? கர்நாடகாவிலா? டாடா நிர்வாக இயக்குனர் ரவிகாந்த் கர்நாடக முதலமைச்சர் யெதியூரப்பாவைச் சந்தித்துப் பேசி இருக்கிறார். கர்நாடக அரசு ஆயிரம் ஏக்கர் நிலம் அளிப்பதாக வாக்குறுதி கொடுத்துள்ளது. கர்நாடகா வில் 'நானோ' தொழிற்சாலை வரும்பட்சத்தில் இரண்டு


* நடிகை ஜெயமாலா

சந்தேகங்கள்: மம்தா பானர்ஜி ஸ்டைலில் முட்டுக்கட்டை போடப் போவது யாராக இருக் கும்? காங்கிரஸ்? அல்லது ஜனதாதளம்?

சமீபத்தில் மாநில மருத்துவக் கல்வி அமைச் சர் ராமச்சந்திர கௌடா, ''அரசு மது விற்பனை யைத் தடை செய்து உத்தர விட வேண்டும்'' என்று சொல்ல, பெங்களூரு 'குடி' மக்களுக்கு அதிர்ச்சி. ஆனால், அடுத்த சிலநாட்களிலேயே, ''அது போன்ற எண்ணம் எது வும் அரசாங்கத்துக்கு இல்லை'' என்று அறிவித்துவிட்டார் முதலமைச்சர் யெதியூரப்பா.

**- கௌதம் ராம்**

# அகத்திருள் நீக்கும் அம்பிகை! 2

**த**மோபஹா என்கிற திருநாமம், தாமஸத்தைப் போக்கக்கூடியவள் அம்பிகை என்பதை உணர்த்துகிறது.

யார் யாரிடம் இந்த இருள் (தாமஸம்) இருக்கிறது? படித்தவர்களிடம் இருக்கிறதா? படிக்காதவர்களிடம் இருக்கிறதா? அனுபவப்பட்டவர்களிடம் இருக்கிறதா? அனுபவமில்லாதவர்களிடம் இருக்கிறதா? பணக்காரர்களிடம் இருக்கிறதா? பணம் இல்லாதவர்களிடம் இருக்கிறதா? என்று ஆராய்ந்தால், அந்த இருள் எல்லாரிடமும் இருக்கிறது. இதை யார் சொன்னார்கள் என்றால், ஆசார்யர் ஆதி சங்கரர் சொன்னார்.

படித்துவிட்டோம் என்றால் ஞானிகளாகிவிட முடியாது. உபநிஷத்படியும், வேதத்தின்படியும் பார்த்தால், வேதமேகூட சாதாரண ஞானத்தைச் சேர்ந்ததுதான்! இரண்டு விதமான வித்தை, இரண்டு விதமான ஞானம் என்று பிரித்துச் சொல்லுவார்கள் - பர வித்தை, அபர வித்தை என்று. வேதம்கூட, பர வித்தையில் அடங்காது; அபர வித்தையில்தான் போய்ச் சேரும்.

ஸர்வபள்ளி ராதாகிருஷ்ணன், இந்த நாட்டினுடைய குடியரசுத் தலைவராக இருந்தவர். அவரிடம் போய் ஒருமுறை, ''வேதத்தையெல்லாம் முறைப்படிதானே அத்யயனம் செய்ய வேண்டும். நீங்கள் அதை வெறுமனே எடுத்து வைத்துப் படித்துக்கொண்டிருக்கிறீர்களே?'' என்று கேட்டார்கள்!

### தத்துவம் படிக்க...

**மி**கப் பெரிய தத்துவ மேதை ராதாகிருஷ்ணன். இந்த நாடு செய்த தவம், அவரைப் போன்றவர்களெல்லாம் இங்கே பிறந்தார்கள். இளமையில் பெரும் வறுமையில் கஷ்டப்பட்டிருக்கிறார். வறுமை என்றால் சாதாரண வறுமை அல்ல; பஸ் டிக்கெட் வாங்கினால் சாப்பாட்டுக்குக் காசு இராது என்கிற அளவுக்கு வறுமை! கல்லூரி மாணவராக இருந்தபோது திருவல்லிக்கேணியில் வாழ்ந்தார். அப்போது அவருக்குக் கல்யாணம் ஆகியிருந்தது. அவரது தந்தை ஓய்வு பெற்றுவிட்டிருந்தார். பெரிய குடும்பம். தம்பி - தங்கைகளையெல்லாம் வைத்துக் காப்பாற்ற வேண்டியிருந்தது. சட்டம் படிக்க விரும்பினாலும் அதை ஒதுக்கி வைத்துவிட்டு, எம்.ஏ. பிலாஸஃபி (தத்துவம்) வகுப்பில் கிறிஸ்துவ கல்லூரியில் சேர்ந்தார். காரணம், தத்துவம் படிப்பதற்கு அன்று உதவித் தொகை அளித்தார்கள்! படிப்பதற்கு ஆட்களே முன்வரவில்லை என்பதால் அளிக்கப்பட்ட ஊக்கத் தொகை. அந்தத் தொகை உபயோகமாக இருக்கும் என்பதால் எம்.ஏ. தத்துவ வகுப்பில் சேர்ந்தார் டாக்டர் ராதாகிருஷ்ணன்! அந்த உதவித் தொகையும் போதாத அளவுக்குப் பெரிய குடும்பம், வறுமைச் சூழல். இந்த டாக்டர் ராதாகிருஷ்ணன் ஒருமுறை சொல்கிறார்:

''அன்னை பராசக்தி எனக்கு இளமையில் வறுமையைக் கொடுத்தாள்; அதனால்தான் அவளை என்னால் பரிபூரணமாக உணர முடிந்தது'' என்று.

அவரிடம் போய் வேத அத்யயனம் பற்றிக் கேட்கவும், ''வேதத்தை அத்யயனம்

ஸ்ரீ லலிதா

மூன்றாம் பாகம்

செய்தவர்கள்தான் அதை முறைப்படி உச்சாரணம் செய்யக் கற்று ஓத முடியும் என்பது உண்மைதான். ஏனென்றால், ஸ்வரம் மாறிப்போய்விட்டதென்றால், உச்சரிப்பு மாறியதென்றால், அர்த்தமே மாறிப்போய்விடும். ஆனாலும், அந்த உச்சாரணம் தெரியவில்லையென்றாலும், வேதத்திலே இருக்கிற ஸாரத்தையும் அர்த்தத்தையும் தெரிந்துகொள்ள அதைப் படித்துக் கொள்ளலாம். அவ்வாறு படிப்பதற்கு உச்சரிப்புத் தேவையில்லை'' என்றார். அதற்கு மேலும் ஒன்று சொன்னார் ஸர்வபள்ளி ராதாகிருஷ்ணன்: ''வேத அத்யயனம் உயர்ந்தது; வேதத்தின் அர்த்தம் மாறாமல் அத்யயனம் செய்வதுடன் அதிலே சொல்லப்பட்டிருக்கிற பொருளை உணர்ந்து, கடைப்பிடித்து வாழ்வது அதைவிட உயர்ந்தது!'' என்றார்!




இந்தக் கருத்தை வேதமே சொல்கிறது; உபநிஷத்தும் சொல்கிறது. வேதத்தை வெறுமே படிப்பது என்பதுகூட அபர வித்யைதான்; அது பிரம்ம வித்தை அல்ல - பர வித்தை அல்ல என்று வேதமே சொல்கிறது!

## ஆஞ்சநேயர் உதாரணம்!

ஆகவே, வேதத்தைப் படித்தவர்களெல்லாருமே முழுசாக பரமாத்மாவை உணர்ந்துவிட்டார்களா என்றால் இல்லை! ஆஞ்சநேயர் சீதையைத் தேடிக்கொண்டு போவார். வால்மீகி இந்தப் பகுதியை ரொம்ப அழகாக விவரிப்பார்: ஆஞ்சநேயர் தேடுகிறார், தேடுகிறார், எல்லா இடங்களிலேயும் தேடுகிறார். மாளிகையில் தேடுகிறார், ராவணனுடைய அந்தப்புரத்தில் தேடுகிறார், பெரிய புஷ்பக விமானத்தில் தேடுகிறார்... எல்லா இடங்களிலும் தேடியும் சீதையைக் காணவில்லையே என்று சோகமாக உட்கார்ந்திருக்கிறபோது, திடீரென்று எதிரே ஒரு சோலை, ஒரு தோட்டம் தென்பட்டது. அப்போதுதான் அவருக்கு நினைவு வந்தது. 'ஓ! சம்பாதி சொல்கிறபோது, சீதை தோட்டத்திலே உட்கார்ந்திருக்கிறாள் என்று சொன்னதை மறந்துவிட்டு, மற்ற எல்லா இடங்களிலும் தேடினேனே!' என்று நினைத்துக்கொண்டார் ஆஞ்சநேயர்! அந்த அசோக வனத்துக்குப் போகிறார். அங்கே ஒரு பெரிய காட்சி தெரிகிறது: சுற்றி ராக்ஷஸிகள் அமர்ந்துகொண்டிருக்க, நடுவிலே ஒரு பெண் வடிவம். பார்த்துக்கொண்டே இருந்தாராம் ஆஞ்சநேயர். வால்மீகி இதைச் சொல்கிறபோது ''காலகாலமாக வேதத்தை அத்யயனம் செய்தவர்கள்கூட, எப்படி பரமாத்மாவின் ஸ்வரூபத்தை முழுமையாக, ஆத்மபரிபூரணமாக அறிந்துகொள்ள முடியாதோ, அந்த மாதிரி, இத்தனை நாட்களாக சீதையைத் தேடிக்கொண்டு அவளுடைய பெயரையே மனத்தில் ஜபித்துவந்த ஆஞ்சநேயருக்குக்கூட, சீதா

பிராட்டியை எதிரிலே பார்த்தவுடன், இதுதான் சீதா பிராட்டி என்று புரிந்து கொள்ள முடியவில்லை!'' என்பார்.

இத்தனைக்கும், ஆஞ்சநேயர் ஸ்ரீ ராமனை முதல் தடவை சந்திக்கிறபோது என்ன நடந்தது என்று பார்த்தால், அவர்தான் ஆஞ்சநேயர் என்பது ஸ்ரீ ராமனுக்குத் தெரியாது. வானர வடிவமாக இன்றி, மானுட வடிவத்தில் ஸ்ரீ ராமனிடம் அவர் பேசுகிறார். ராமபிரான், தன் தம்பியான இளையபெருமாளை அழைத்துச் சொல்கிறார் - ஆஞ்சநேயர் பேசுவதைக் கேட்டுவிட்டுச் சொல்கிறார்: ''எதிரே நிற்கக்கூடிய இவர், பெரிய ரிக் வேதி என்று நினைத்தாயா? அல்லது ஸாம வேதி என்று நினைத்தாயா? இவர் யஜுர் வேதத்தைக் கரை கண்டவர் என்று நினைத்தாயா? இல்லையில்லை. இவர் யார் தெரியுமா? இவர் எல்லா வேதங்களையும் ஒன்றாகச் சேர்த்துக் கரைத்துக் குடித்தவர்'' என்கிறார்.



✱ ராதாகிருஷ்ணன்

'இவர் கல்லாத கலையுமே வேதக் கடலுமே இல்லை' என்பது கம்பன் பாட்டின் வரி.

அப்படிப்பட்ட ஆஞ்சநேயர்தான், சீதையை நேரில் பார்த்தபிறகும் அவள் யார் என்று புரிந்துகொள்ள முடியாமல் இருந்தார். எப்படி, காலகாலமாக வேதத்தை அத்யயனம் செய்தவர்கள்கூட பரமாத்மாவை உடனடியாகப் புரிந்து கொள்ள முடியாதோ, அந்த மாதிரி!

## பர வித்தை, அபர வித்தை

வேதத்தின் விழுப்பொருளான பரம்பொருளை உணர்ந்துகொள்வதும் அனுபவிப்பதும்தான் பர வித்தை என்றால், அந்த வேதத்தை வெறுமே அத்யயனம் செய்வது அபர வித்தைதான் என்பது, நம்முடைய சம்பிரதாயம் நமக்குச் சொல்லும் செய்தி.

உள்ளுக்குள்ளே இருக்கிற ஞானத்தை உணர்ந்து கொண்டவர்களுக்கு, பரம்பொருளை உணர்ந்தவர்களுக்கு, வெளியே இருக்கிற இருட்டு தெரியாது. உள்ளே ஞானத்தின் ஸ்வரூபத்தை உணர்ந்துகொள்ளவில்லையென்றால் என்னதான் வெளியே பெரிதாக விளக்கு போட்டுப் படித்தாலும் உள்ளே இருட்டு அகலாது.

இதைக் கண்கூடாக எங்கே பார்க்கலாம் என்றால், வெளியிலே இருந்த அமாவாசை இருட்டை, உள்ளுக்குள்ளே முழுக்க முழுக்க மனு ஸ்வரூபமாக இருந்தாளே, **அவள்** வெளிச்சம் தெரிந்ததாலே 'பௌர்ணமி' என்று சொன்ன அபிராமி பட்டரிடத்திலே பார்க்கலாம்.

அப்படி உள்ளுக்குள் இருக்கக்கூடிய தாமஸத்தை - தமோ குணத்தை - அஞ்ஞான இருட்டைப் போக்கக் கூடியவள் தமோபஹா.

**சித்** இது அடுத்த திருநாமம். சித்ஸ்வரூபமாக - சைதன்யமாக இருக்கக் கூடியவள் ஸ்ரீ லலிதாம்பிகை.

**தத்பதலக்ஷ்யார்த்த** 'தத்' என்கிற பதத்தின் லக்ஷ்ய அர்த்தமாக இருக்கக் கூடியவள். லக்ஷ்ய அர்த்தம் என்றால் என்னவென்பதை அடுத்து வரும் அத்தியாயத்தில் பார்ப்போம்.

**(வளரும்)**

**அண்ணா திரை, காவ்யா சண்முக சுந்தரம், காவ்யா, 16, இரண்டாம் குறுக்குத் தெரு, டிரஸ்ட்புரம், கோடம்பாக்கம், சென்னை - 600 024. ரூ. 150.00**

பேரறிஞர் அண்ணாவின் நூற்றாண்டு விழா சிறப்பு வெளியீடாக அமைந்துள்ளது நூல். ''தணிக்கை ஏதும் செய்யாமல் இருந்தால் ஒரே திரைப்படத்தின் மூலம் ஆட்சியைப் பிடித்துவிடுவேன்'' என்ற அண்ணாவின் கூற்று முன்னுரையாக அமைந்துள்ளது. தொடர்ந்து திரைத்துறையில் அண்ணாவின் ஆளுமைகளையும், பங்கையும் நான்கு தலைப்புகளின் கீழ் ஆய்வு நோக்கில் விவரிக்கிறது. 'அண்ணாவின் திரை இலக்கியம்' என்ற தலைப்பின் கீழ் அவர் கைவண்ணத்தில் அமைந்த திரைப்படங்களின் கதை, வசனங்கள் இடம்பெற்றுள்ளன. நூற்றாண்டு விழாவில் அறிஞருக்கு சிறந்த நூல் அஞ்சலி!

# நூல் அஞ்சலி!









★ **சதுரகிரி யாத்திரை, பி. சுவாமி நாதன், விகடன் பிரசுரம், 757, அண்ணா சாலை, சென்னை - 600 002. ரூ. 85.00**

ஸ்ரீவில்லிப்புத்தூர் - மதுரை இடையே அமைந்துள்ள திருத்தலம் சதுரகிரி. அத்தலத்தின் சிறப்புகளை, யாத்ரீகனின் நோக்கில் தொகுத்துத் தந்துள்ளார், ஆசிரியர். பயணம் சென்று வந்தவர்களின் அனுபவங்கள், யாத்திரை செல்வோர் கவனம் கொள்ள வேண்டிய குறிப்புகள், தொடர்புகொள்ளவேண்டிய நபர்கள் - என அனைத்தும் நூலில் இடம்பெற்றிருப்பது வாசகர்களுக்குப் பயனளிக்கும். வண்ணப் படங்களுடன் நூல் அமைந்திருப்பது, யாத்திரை சென்று வந்த உணர்வை வாசகர்களுக்குத் தோற்றுவிக்கும் என்பதில் ஐயமில்லை.

**கனவுப் புதையல்கள், வைரபாரதி, தோழமை பதிப்பகம், 1, எடத்தெரு, மயிலாடுதுறை, நாகை மாவட்டம், ரூ. 70.00**

தன்னம்பிக்கை, காதல், கும்பகோண விபத்தில் இறந்த குழந்தைகளுக்கு அஞ்சலி போன்ற இருபத்திரண்டு மாறுபட்ட தலைப்புகளில் அமைந்த கவிதைத் தொகுப்பு. கவிதை வரிகளை நம் மனத்தில் நிறுத்துகிறது, கவிஞரின் கற்பனை. 'இப்பூமி சுழல ஒரு புன்னகை சிந்திவிட்டுப் போ' என்னும் வரி ஒரு சான்று. 'சாதி' கவிதை ஒரு குறும்படம் பார்த்த உணர்வைத் தருகிறது. கனவுகளைக் கவிதைகளாகத் தொகுத்த புதையல் இந்நூல்.

**- நேயமுகில்**

● மைனாரிட்டி அரசு என்று விமர்சிக்கப்பட்டாலும் காங்கிரஸை அமைச்சரவையில் சேர்த்துக் கொள்வதில்லை என்ற தனது முடிவை, மீண்டும் பரிசீலனை செய்யத் தக்கவிதத்தில் முதல்வரே பேசியுள்ளது அரசியல்வட்டாரத்தை வியப்பில் ஆழ்த்தியுள்ளது. இதற்கு ஒரு முக்கியமான காரணத்தை காங்கிரஸார் கூறுகிறார்கள். இந்தமுறை காங்கிரஸ் பாராளுமன்ற வேட்பாளர் தேர்வில், வாசன் கோஷ்டியைச் சேர்ந்த பெரும்பாலோருக்கு மீண்டும் வாய்ப்பு கிடைப்பது அரிது. அந்த நிலையில் வாசன் கோஷ்டி மீண்டும் தமிழ் மாநில காங்கிரஸ் கொடியைத் தூக்கி விஜயகாந்தோடு கைகோர்க்கும் ஆபத்து உண்டு. எனவே அந்த நிலையைத் தவிர்க்கும் விதமாக, காங்ரஸை ஆட்சியில் இணைத்து, வாசன் ஆதரவு சட்டமன்ற உறுப்பினர்கள் இரண்டு மூன்று பேருக்கு அமைச்சர் வாய்ப்பு கொடுத்தால், ஸீட்டு கிடைக்காத காங்கிரஸ்காரர்கள் பாராளுமன்றத் தேர்தலின்போது புரட்சி செய்ய வாய்ப்பிருக்காது என்பதுதான் கருணாநிதியின் மாற்றத்துக்குக் காரணமாம். மேலும் காங்கிரஸ்காரர்கள்கூட தே.மு.தி.க.வுடன் தேர்தல் உறவு குறித்து இனி பேசமாட்டார்களே! தவிர, ஸ்டாலினை அரியணையில் அமர வைத்தால், பாராளுமன்றத் தேர்தல் முடிவு பாதகமாக இருந்தாலும் ஆட்சிக்கு ஒன்றும் பிரச்னை இருக்காதே!

● தி.மு.க.வுக்கும், பா.ம.க.வுக்கும் நீண்ட இடைவெளி உண்டாகிவிட்டாலும், பாராளுமன்றத் தேர்தலில் பா.ம.க.வை, விட்டுவிடக் கூடாது என்பதில் காங்கிரஸ் குறியாக உள்ளது. எனவே, வரும் கால கட்டங்களில், தி.மு.க. எதிர்ப்பு நிலைமை கொஞ்சம் நீர்த்துப் போகும்படி பா.ம.க. நடந்து கொள்ளும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இதற்கு மிக முக்கியக் காரணம் 'காங்கிரஸை விட்டுப் போகக்கூடாது' என்று அன்புமணியிடம் சோனியா போட்டிருக்கும் அன்புக் கட்டளைதானாம்.



# சிதம்பரம் TV?

● புதிய சேனலாக பாரத் தொலைக்காட்சி என்ற பெயரில், புதிய டீ.வி ஒன்று துவங்கப்பட இருக்கிறது. இதன் பின்னணியில் நிதி அமைச்சர் ப.சிதம்பரம் இருப்பதாக சேதி உலா வருகிறது. இதற்கான பொறுப்புகளை பத்திரிகை யாளர் மாலன் கவனித்துக் கொள்வதாகத் தகவல்.

– ஸ்ரீநி



# நோயாக மாறிவிட்ட எழுத்து!

**கிழக்கு பதிப்பகம் நடத்திய மொட்டை மாடிக் கூட்டத்துக்கு வந்திருந்த எழுத்தாளர் சாரு நிவேதிதாவின் பேச்சிலிருந்து...**

● இன்று இணையதளங்களில் நிறைய பேர் எழுதுகிறார்கள். எழுத்து என்பது ஜனநாயக வாக்குரிமை மாதிரி எல்லாருக்கும் சொந்தமானதாகியிருக்கிறது! இதை ஒரு நோய் என்றே சொல்லத் தோன்றுகிறது. எதற்கும் ஓர் உழைப்பு தேவைப்படுகிறது. எடுத்தவுடன் ஒரு இன்ஸ்ட்ருமெண்ட் கிடைத்துவிட்டது என்பதற்காக கடகடவெனத் தட்டி அதை Blog-ல் போடுவது என்பது ரொம்ப ரொம்ப irresponsible ஆன விஷயம். உரைநடையில் ப.சிங்காரம், அசோகமித்திரன், ஆதவன் என இதுபோன்று இருபத்தைந்து முப்பது பேர் இருக்கிறார்கள். இவர்கள் என்ன செய்தார்கள் என்று படிக்காமல், சிறுகதை ஒன்றை எழுதி அதை எனக்கும் அனுப்பி எப்படி என்று கேட்கிறார்கள். ஆத்மாநாம் படித்திருக்கிறீர்களா? பாரதி? ஆண்டாள் தெரியாமல் எப்படி கவிதை எழுதுவீர்கள்? பாரதிக்குப் பிறகு சமகாலத்தில் என்னென்ன செய்திருக்கிறார்கள்? அதெல்லாம் படிக்காமல் கவிதை என்று ஒன்றை எழுதி அதை blog-ல் போட்டு, அவரவர் இஷ்டத்துக்கு, எவ்விதக் கட்டுப்பாடோ நெறிமுறையோ இன்றி ஏதோ நடந்துகொண்டிருக்கிறது.

● மொழிபெயர்ப்பு மூலமாக ஒருவர் கோடீஸ்வரர் ஆக நான் வழி சொல்கிறேன். இலக்கிய நோபல் பரிசுக்கு நான்கரை கோடி பரிசாகத் தருகிறார்கள். அதைவிட அதிக தொகை ஒரேயொரு நாவலுக்கு டப்ளின் இம்பேக்ட் விருது மூலமாகக் கிடைக்க வாய்ப்புண்டு. டப்ளின் இம்பேக்ட் விருதுக்கு வருகிற நாவல்களை விடவும் பிரமாதமான நாவல்கள் தமிழில் உள்ளன. ஒரே குறை, அவை ஆங்கிலத்தில் கிடைப்பதில்லை. அப்படியே கிடைத்தாலும் அவர்களிடத்தில் கொண்டு போய்ச் சேர்ப்பதில்லை.

● சென்னை தரமணியில் உள்ள ரோஜா முத்தையா நூலகத்தில் உள்ள அனைத்தும் அமெரிக்காவின் சொத்தாக இருக்கிறது. ரோஜா முத்தையா நூலகம் தொடங்க அமெரிக்கா உதவி செய்திருக்கிறது. மோர்க் குழம்பை 150 விதமாகச் செய்யலாம். மோர்க்குழம்பு சமையல் குறிப்புகள் எழுதலாம் என்று அங்கு சென்றால் அமெரிக்காகாரனிடமிருந்து அனுமதி பெறாமல் எழுத முடியாது என்று உத்தரவு போட்டிருக்கிறார்கள். சரபோஜி மகாராஜா காலத்துச் சமையல்காரரின் சமையல் குறிப்புகள் அவை. இதற்கு நான் அமெரிக்காகாரனிடம் காப்பிரைட் வாங்க வேண்டுமாம்!

● தமிழ்நாட்டுப் பள்ளிகளில் கடந்த 20 வருடங்களாக யாரும் தமிழ் படிக்கவில்லை. இதற்கு முழுக்க முழுக்க திராவிடக் கட்சிகளே காரணம். ஆங்கிலத்தில் மோகம் கொண்டு அதில் மட்டுமே பேசி ஏதாவது சாதித்தார்களா என்றால் அதுவும் இல்லை.

**- சநகன்**

# கல்கி தீபாவளி மலர் 2008



- தெய்வீக ஓவியங்களின் தொகுப்பு!

  - கோபுலு, தனுஸு, வேதா, மாருதி, சாஜீ துருத்திஸ்

- வசீகரமான வண்ணப் படங்களின் அணிவகுப்பு!

  - யோகா, ஸ்ரீஹரி, ஷண்முகசுந்தரம்

- பயண அனுபவங்களின் பயனுள்ள பதிவு!

  - அந்தமான், சிங்கப்பூர், ஆனைக்காட்டழகர் கோயில்

- தற்கால சித்திரக்கலையின் சாகசத் தெறிப்பு!

  - பூஷண், ஸ்ரீநிவாசன், நெல்சன் கென்னடி, சாருலதா

புரட்டிப் பார்த்தாலே மகிழ்ச்சி
படித்துப் பார்த்தாலோ நிறைவு!

வாங்கத் தவறாதீர்கள்!

விலை ரூ.100/- மட்டுமே.
கூரியர் மூலம் பெற ரூ.30/- சேர்த்து எம்.ஓ. அல்லது D.D. அனுப்பவும்
மானேஜர், கல்கி, 47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல் சென்னை - 32
தொலைபேசி : 4343 8888

---

உள்ளூர் ஏஜென்டிடமும் பதிவு செய்து கொள்ளலாம்

## நீங்கள் கேட்டவை

● கே. கணேசன், மறைமலைநகர்

*? ''எப்படியாவது ஆட்சிக்கு வந்துவிட வேண்டும் என்று துடிக்கும் அரசியல் தலைவர்கள், நாட்டில் வேறு பிரச்னையே இல்லாததால், மின்சாரப் பிரச்னையை வைத்துக்கொண்டு அரசியல் செய்கின்றனர்'' என்கிறாரே ஆர்க்காடு வீராசாமி?*

! வீராசாமி உள்பட அரசியல்வாதிகள் எல்லோருமே ஆட்சிக்கு வரத் துடிக்கத்தான் செய்வார்கள். அதற்குத்தான் அரசியலுக்கே வருகிறார்கள். நாட்டில் வேறு பிரச்னைகள் இல்லை என்ற ஆர்க்காட்டாரின் அனுமானம் அபத்தம். வேறு பிரச்னைகள் இருந்தாலும் மின்சாரம் அடிப்படைத் தேவை என்பதால் அதி முக்கியப் பிரச்னை என்பதைக்கூட உணராத மின்துறை அமைச்சர் தேவைதானா?



★ வளர்ச்சியின் அறிகுறி!

# வடிவேலு வீடு தாக்கப்பட்டது பற்றி?

● வீ. உதயக்குமாரன், வீரன்வயல்

*? நடிகர் வடிவேலுவின் வீடும் அலுவலகமும் சூறையாடப்பட்டது நியாயமா?*

! நியாயமே அல்ல. அது தூண்டுதலின் பேரில் நடந்திருந்தாலும் நியாயமல்ல. தூண்டுதல் பேரில் நடந்ததாக நாடகமாடியிருந்தாலும் நியாயமல்ல. அரசியல் அநாகரிகம் தலைவிரித்தாடுவதை உணர்த்தும் சம்பவம்.

● வே.சித்ரா, கும்மிடிப்பூண்டி

*? அ.இ.மு.க.வினர் விஜயகாந்தைத் தாக்கி அறிக்கை விடுவது எதைக் காட்டுகிறது?*

! விஜயகாந்தின் வளர்ச்சியை. அது தி.மு.க., அ.தி.மு.க. ஆகிய இருதரப்பிலும் கிலி உருவாக்கி வருவதை.

● எஸ்.வெங்கடரமணன்,

சென்னை - 33

*? கர்நாடகாவில் கிறிஸ்துவ ஆலயங்கள் தாக்கப்பட்டது தொடர்பாக, ''இந்தியாவின் மத சுதந்திரத்தைப் பாதுகாக்க வேண்டும்'' என அமெரிக்கா வேண்டுகோள் விடுக்*

*துள்ளதே - ஆடு நனைகிறதே என்று ஓநாய் அழுதது போல இல்லையா?*

! ஓநாய் அழுவது கிடக்கட்டும். ஆடு நனைவது உண்மைதானே. அதைத் தவிர்க்க வேண்டாமா நாம்?

● **பா. அச்சுதன், வயலூர்**

*? ஆட்சி என்றால் குறை இருக்கத்தான் செய்யும். கடவுளால்கூட நிறைவான ஆட்சியைத் தரமுடியாது என்று கருணாநிதி கூறியுள்ளாரே?*

! குறைகள் இல்லாத ஆட்சியை மக்கள் எதிர்பார்க்கவில்லை. குறைகள் குறைந்த பட்சமாக இருக்கவேண்டும் என்று எதிர்பார்ப்பதில் தவறும் இல்லை. எதற்கும் கடவுளை இழுத்து, குறை சொல்வது கருணாநிதியிடம் உள்ள பெரிய குறை!

● **டி.முருகேசன், திருவாரூர்**

*? நாடாளுமன்றத் தேர்தலில் கோஷ்டிகள் அடிப்படையில் 'சீட்' ஒதுக்கீடு கிடையாது என காங்கிரஸாருக்கு சோனியா எச்சரித்திருப்பது பற்றி?*

! 'கோஷ்டி ஒதுக்கீடும் கிடையாது, உட்கட்சி ஜனநாயகமும் கிடையாது; எல்லாம் என் இஷ்டப்படிதான் நடக்கும்' என்பது உள்ளர்த்தம்.

● **ஆர்.ராஜதுரை, சீர்காழி**

*? மின்சார வெட்டு, பத்திரிகைகளையும் பாதிக்கிறதா?*

! பத்திரிகைகள் சிறிதும் காலதாமதமின்றி வெளிவர வேண்டும்; அவற்றின் உற்பத்தியை ஒத்திப் போடவே முடியாது என்பதால், மற்ற துறைகளைவிட பத்திரிகைத் துறையில்தான் மின்வெட்டு காரணமாகப் பாதிப்பு அதிகம்.

● **ச.அ.கேசவன், தூத்துக்குடி**

*? தாய்மொழிச் சிந்தனை, அயல் மொழிச் சிந்தனை - வேறுபாடு என்ன?*

! தாய்ப்பாலுக்கும் புட்டிப்பாலுக்கும் இடையேயுள்ள வித்தியாசம்தான். வேறென்ன?

● **பி.பாலாஜி கணேஷ், கோவிலாம்பூண்டி**

*? கிராமப் பகுதியில் ஒரு இட்லி ஒரு ரூபாய், ஒரு கிலோ அரிசியும் ஒரு ரூபாய். இது பெருமைப்பட வேண்டிய விஷயம் என்று சுகாதார அமைச்சர் பன்னீர் செல்வம் கூறுவது பற்றி?*

! தமிழக அரசு பின்பற்றுவது தலைகீழ்ப் பொருளாதாரம் என்பதை அமைச்சரே தமது 'வாக்குமூலத்தில்' உறுதி செய்கிறார். இதில் பெருமைப்பட என்ன இருக்கு? தலைகீழ்ப் பொருளாதாரத்துக்குப் பன்னீர் தெளிச்சா, செல்வம் பெருக்கெடுத்து ஓடாது!

● **அ.யாழினி பார்வதம், சென்னை - 78**

*? பத்து புது மது வகைகளை அறிமுகப்படுத்தி, பத்தாயிரம் கோடி வருவாயை*

* தாக்குதல் நாடகம்!



* அட்டகாச எதிர்காலம்!





* பொதிந்துள்ள அர்த்தம்!

* நிரந்தரக் குறை!



* அடிப்படையில் ஆட்டம்

இலக்காக தமிழக அரசு பகிரங்கமாக அறிவித்துள்ளது சாதனையா? வேதனையா?

! மது அருந்தும் பழக்கம் உள்ளவர்களுள் ஐம்பது சதவிகிதத்தினருக்கு மேலானோர், அதற்கு அடிமையாகி அவதிப்படுகின்றனர் என்பது நிரூபணமாகியுள்ள நிலையில், தமிழக அரசின் வேதனை தரும் இலக்கு, ஒட்டுமொத்தத் தமிழர்களின் எதிர்காலத்துக்கே சோதனை.

● ஸி. இந்து, கள்ளக்குறிச்சி ★

? கல்வி மற்றும் சுகாதாரத்தில் ஒரு நாடு முன்னேறியிருந்தால் அது எளிதாக வளர்ச்சியடையும் என்று சொல்கிறார்களே; நமது நாடு இவற்றில் எவ்வாறு உள்ளது?

! கரும்பலகைகள் இல்லாத கிராமப் பள்ளிகளும், கழிவறையே அறியாத குக்கிராமங்களும் நம் நாட்டில் ஏராளம். இவற்றுக்கிடையேயும் முன்னேற்றம் நிகழ்ந்துள்ளது உண்மைதான். ஆனால், ஏற்கெனவே வசதி படைத்தவர்கள்தான் அதன் பயனை நுகர்பவர்களாக இருக்கின்றனர்.

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்

? ''பாராளுமன்றத் தேர்தல் வெற்றியில்தான் அ.இ.மு.க.வின் எதிர்காலம் உள்ளது'' என்று ஜெயலலிதா கூறுகிறாரே?

! உண்மைதான். அதில் வென்றால், சட்டமன்றத் தேர்தல் வெற்றிக்கு அச்சாரம் என்பதுடன், தேசிய அளவிலான அரசியலில் அட்டகாசம் செய்யும் வாய்ப்பும் கிடைக்கிறதே!

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

? 'இஞ்சி இடுப்பழகா' போன்ற பாடல்களுக்குக் கழகத்தினர் ஆடக் கூடாது; எம்.ஜி.ஆர். பாட்டுக்கு மட்டுமே ஆடலாம்'' என்று ஜெ. ஆணையிட்டுள்ளது பற்றி...?

! அப்பாடல் பண்பாட்டுக் குறைவானது என்பது அவர் கருத்து. எம்.ஜி.ஆர். படப் பாடல்கள் பலவற்றுக்கும் அந்தக் குறைபாடு உண்டு என்பதை (மறைத்து) மறந்துவிட்டுப் பேசியிருக்கிறார்! ○

❐ ரூ.100/- பரிசு பெறுபவர்:
யாழினி பார்வதம், சென்னை - 78

★ ரூ.50/- பரிசு பெறுபவர்:
ஸி.இந்து, கள்ளக்குறிச்சி

# தீபாவளி ரிலீஸ் ரஜினி டி.வி.

பேசினார், பேசவில்லை... என்று, ஏதாவது ஒரு விஷயத்தை ரஜினி தொடர்பாக மீடியாக்கள் வெளியிட்டுக் கொண்டேதான் இருக்கின்றன. அந்த வரிசையில், புதிதாக டி.வி. சேனல் ஒன்றைத் தொடங்கப்போகிறார் என்றும் ஒரு செய்தி உலவியது.

ரஜினி தொடங்கப்போகிறாரோ இல்லையோ, ரஜினி பெயரில் விரைவில் ஒரு நெட் டி.வி. வெளிவரப் போகிறது. www.rajini.com, www.rajini.net என்று இரண்டு டொமெய்ன்களை அதற்காக ரிசர்வ் செய்திருக்கிறார்கள். அதைப் பற்றி விசாரித்தோம்.

''உண்மைதான். அதற்கான வேலைகள் நடந்துட்டிருக்கு. இப்ப 'பெண்டா ஃபோர்'தான் நெட் டி.வி. பண்ணிட்டிருக்காங்க. அவங்க கூட லைவ் பண்றதில்லை. பட், நாங்க பண்ணப் போற இந்த ரஜினி டி.வி.ல லைவ் பண்ணப் போறோம்'' என்றார் ஆர்செல் ஆறுமுகம்.

இதற்கான வேலைகளில் ஈடுபட்டுக் கொண்டிருப்பவர் இவர்தான். இரண்டு ஆண்டுகளுக்கு முன் ராஜ் டி.வி.க்காக, 'சிவாஜிராவ் முதல் சிவாஜி வரை' என்ற ரஜினி பிறந்த நாள் நிகழ்ச்சியை இயக்கிய இவர்தான், தற்போது கலைஞர் டி.வி.யில் ஞாயிறுதோறும் ஒளிபரப்பாகும் ரசிகன் என்னும் நிகழ்ச்சியையும் இயக்கியிருக்கிறார்.

''சரி; திடீர்னு ரஜினி டி.வி.ன்னு ஆரம்பிக்கிற ஐடியா ஏன் வந்தது? தவிர, ரொம்பச் செலவாகுமே?'' என்றபோது,

''ரசிகன் நிகழ்ச்சிக்காக தமிழ்நாட்டுல இருந்து மட்டுமல்ல; பெங்களூர், மும்பை, சவுதின்னு எங்கெங்கிருந்தோ ரசிகர்கள் பேசினாங்க. நாங்க எப்படி வந்து கலந்துக்கறதுன்னாங்க. இது பிரமிக்க வெச்சது. என்னை அறியாமலேயே நானும் ரசிகனானேன்னுதான் சொல்லணும். அப்புறம், இந்த நெட் டி.வி.க்கு நிறைய ஒண்ணும் செலவாகாது. சில லட்சங்கள்தான். அதற்கான முயற்சிகள்லதான் இருக்கேன்'' என்கிறார் நம்பிக்கையுடன்.

இந்த ரஜினி டி.வி. முழுக்க முழுக்க ரஜினி, அவரது படங்கள், அவரது பொதுச் சேவைகள், அவரது ரசிகர்கள் செய்யும் நற்பணிகள்... என்று ரஜினியின் ஒட்டுமொத்தத் தொகுப்பாக அமையப் போகிறது.

''இப்ப நீங்க பார்த்தீங்கன்னாலும் அபூர்வ ராகங்களோட ஸ்டில் ஒண்ணு மட்டும் வெச்சிருக்கோம். அண்டர் கன்ஸ்டிரக்ஷன்னு வரும். அதற்கான வேலைகள் முழுவீச்சுல நடந்திட்டிருக்கு. சீக்கிரமாவே நீங்களும் நெட்ல பார்க்கலாம்'' என்கிறார் புன்னகையுடன்.

வெரிகுட். தீபாவளிக்கு வந்துருவீங்களா?

**- வேட்டுவன்**

# என்னை இயக்கிய ஹீரோக்கள்-10

# மேலப்பொன்னகரம் முதல் சின்னமண்டவாடி வரை

சின்ன வயதில் என் சித்திதான் முதன் முதலில் ஒரு டேபிள் கடிகாரத்தை வைத்து எனக்கு நேரம் பார்க்கச் சொல்லித் தந்தார். 'சின்னமுள்ளு - மணி, பெரிய முள்ளு - நிமிசம்' என விலாவாரியாகச் சொன்னார். நான், 'அப்ப இந்த ஒல்லி முள்ளு எதுக்கு?' என்றதும், 'அது நொடி முள்ளு... அதை விட்டுறு!' என்றார் சித்தி. ஆனால் நான் அதை விடவில்லை. 'அது மட்டும் ஏன் ஒல்லியா இருக்கு?', 'அது மட்டும் ஏன் குடுகுடுன்னு ஓடுது?', 'அது சின்ன முள்ளுக்கு மேல்புறமா போகுதா? கீழ்ப்புறமா போகுதா?' எனத் தொடர்ந்து குடைந்தேன். 'டேய் பக்கி... உயிரை வாங்காம முதல்ல சொன்னதைக் கத்துக்கோயேன்டா!' என சித்தி கெஞ்சியதும்தான் விட்டேன். கற்றுக்கொண்ட ஆரம்பத்தில் யாராவது திடீரென, என்னிடம் மணி கேட்டால், 'பதினாறு' என்றெல்லாம் சொல்லி பயமுறுத்துவேன்.

என் அம்மாவின் ஒரே தங்கையான பவானி சித்தி (ஒரிஜினல் பெயர் நாகலட்சுமி) எனக்கு ரொம்ப நெருக்கம். அடிக்க மாட்டார். எது கேட்டாலும் வாங்கித் தருவார் என்கிறதாலேயே அலாதி அன்பு. சித்தி பள்ளி ஆசிரியராக இருந்தார். சித்தப்பா ஞான சுந்தரம் (தமிழ்ப் புலவர்) தலைமை ஆசிரியராக இருந்தார். இருவருமே பழனி - ஒட்டன்சத்திரத்துக்கு அருகே பணிபுரிந்ததால், அங்கே கிராமத்தில்தான் சித்தி வீடும் இருந்தது. எனக்கும் அண்ணனுக்கும் ஒவ்வொரு வருஷமும் பாடப் புத்தகங்களை அவர்கள்தான் வாங்கித்தருவார்கள். ஒவ்வொரு முறை வந்து போகும்போதும் எங்களுக்கு சின்னதாக செலவுக்குப் பணம் கொடுப்பார்கள். அதுதான் மட்டற்ற மகிழ்ச்சி.

எனக்கு விபரம் தெரிந்து என் முதல் வெளியூர் பயணம், நான் மூன்றாவது படிக்கும்போதுதான். அதுவரை எனக்குத் தெரிந்ததெல்லாம் நாங்கள் குடியிருந்த மேலப்பொன்னகரம்தான். விடுமுறைக்காக எனது சித்தி ஊரான சின்னமண்டவாடிக்குச் சென்றேன். நான், தம்பி பிரபு (சித்தி பையன், என்னைவிட ஐந்து வயது சின்னவன்) சித்தி, சித்தப்பா மட்டும் கிளம்பினோம். அம்மா, அப்பா இல்லாத முதல் பயணமும்கூட! பஸ்ஸில் கிளம்பியபோது குறிப்பிட்ட தூரத்துக்குப் பின் ஊரின் வீடுகள் முடிந்துபோய் வயல்வெளிகளும், மரங்களும், மலைகளும் வந்தபோது எனக்கு மகா ஆச்சர்யமாக இருந்தது.

செம்பட்டியில் பஸ் நின்றபோது சித்தி வேர்க்கடலை பொட்டலம் வாங்கித் தந்தார். இவ்வளவு பெரிய பொட்டலமா என ஆச்சர்யப்பட்டுத் திறந்தால் பாதி பொட்டலம் வரை பேப்பரால் மட்டுமே அடைக்கப்பட்டிருந்தது. மீதி இடத்தில் கொஞ்சூண்டு கடலை! இன்று உலகமெங்கும்

நடக்கும் இதுபோன்ற ஃப்ராடுத்தனத்தை, முதன்முதலில் துவங்கிவைத்தது செம்பட்டி பஸ் ஸ்டாண்டுதான் என நினைக்கிறேன்.

ஒட்டன்சத்திரத்திலிருந்து பன்னிரண்டு கி.மீ. தொலைவில் உள்ள சின்ன மண்டவாடி அழகான கிராமம். ஒரு ஆறு இருந்தது. சுற்றிலும் மலைகள் சூழ்ந்திருக்கும். தோப்புகள் தவிர்த்து பருத்தியும்,



## இயக்குநர் சிம்புதேவன்

கடலையும்தான் முக்கிய சாகுபடி. அங்கிருந்த ஒரே நடுநிலைப் பள்ளியில் சித்தப்பா ஹெட்மாஸ்டர் என்பதால், அவர் ஊருக்குள் முக்கியப் பிரமுகர். அதேபோல் சித்தியை எல்லோரும் 'டீச்சர்' என்றே அழைத்தார்கள். 'டீச்சர் அக்கா பையன்' என எனக்கும் ராஜமரியாதை! கடையில் வடை சாப்பிட்டால் காசு வாங்க மாட்டார்கள். குளிக்கவேண்டும் என்றால் ஏழெட்டு பேர் சேர்ந்து பம்ப்செட் கூட்டிப் போவார்கள். சிலர் காலைக் கடன் கழிக்கக்கூட நல்ல இடம் பார்த்துக் கொடுப்பார்கள். புளியம்பழம் கேட்டால் ஒரு மூட்டை அடித்துத் தருவார்கள். நானும் என் தம்பியும் விளையாண்டு தீர்ப்போம்.

சாப்பாடு விஷயத்தில் சித்தி அசத்திவிடுவார். இரண்டு மடங்கு சாப்பிடுவோம். வீட்டில் புது ரேடியோ இருக்கும். டீ.வி. இல்லாத அப்போது அதுதான் சகலமும்! இரவு கயிற்றுக் கட்டிலில் வெளியே படுத்துக்கொண்டு ,கொடைக்கானல் ரேடியோ கேட்பது தனி சுகம். குறிப்பாக விளம்பரங்கள்! சாந்தா டில்டிங் வெட் கிரைண்டர், கோபால் பல்பொடி, சங்கு மார்க் லுங்கிகள், ஆனந்த் பனியன் ஜட்டிகள் என அந்த விளம்பரங்கள்தான் உண்மையான வரலாற்றுக் குறியீடுகள். தவளை சத்தத்தோடு தெரிந்த அந்த இரவு வானங்கள் எனக்கு மிகப் புதுசு.

ஊரில் நுழைந்தவுடன் சித்தப்பா பணிபுரியும் 'இந்து நடுநிலைப்பள்ளி' இருந்தது. ஐந்து வகுப்பறைகள் உள்ள சின்ன ஓட்டு கட்டடம். அறுபது மாணவர்கள். சித்தப்பாவுக்குத் தனி ரூம். அவர் ரூமில் நிறைய ஐட்டங்கள் இருக்கும். எலும்புகள், ஜாடிகளில் பூச்சிகள், ஒரு குடுவையில் பதப்படுத்தப்பட்ட பெரிய பாம்பு என எல்லாம் சுவாரஸ்யமானவை. வகுப்பறையின் போர்டுகளில் எல்லாம் நான் சாக்பீஸில் படம் வரைவேன். நெசவு தாத்தா, சமைத்துப் போடும் மதிய உணவு டேஸ்ட்டாக இருக்கும். ஊர்க்குழந்தைகள் பூராவும் வந்து சாப்பிடுவார்கள்.

ஊரில் எருமைகள் அதிகம். சாயந்திரத்

துக்கு மேல் பள்ளி வரான்டாவில் எருமைத் தயிரை வாளிகளில் கொண்டு வந்து அடுக்குவார்கள். வாளியில் எருமைத் தயிரை நிறைத்து பாலிதீன் போட்டு மூடிக் கட்டியிருப்பார்கள். எல்லாம் ஏற்று மதிக்காக. நானும் தம்பியும் யாருக்கும் தெரியாமல் பாலிதீன் பேப்பரைக் கிழித்து உள்ளே ஒரு விரலை விட்டு எடுத்தால், தயிர் கெட்டியாக விரல் நுனியில் நிற்கும். ஆசை தீரத் தின்போம். ஒருமுறை உரிமையாளர் ஒருவர் திருடும்போது பார்த்துவிட, 'உனக்கு எருமை வயசாகுது. எருமைத் தயிர் திருடறியே... அறிவில்லை?' என்றார். அவர் அடிக்காமல் விட்டதுதான் எனக்குக் கிடைத்த பெரிய மரியாதை. சின்ன மண்டவாடியில் தங்கிய அந்த மூன்று வாரங்கள், எனக்குப் புது அனுபவத்தை உணர்த்திய முக்கியமான நாட்கள்.




அதன்பின் ஆறேழு வருஷம் கழித்து சித்தி ஊருக்குப் போனபோது, அங்கிருந்து காலி செய்து ஒட்டன்சத்திரத்துக்கே குடி வந்து விட்டார்கள். சின்னமண்டவாடியை மறுபடி பார்க்க முடியவில்லை. ஒட்டன்சத்திரம் வேறு விதமான கிராம அனுபவம் என்றாலும் சித்தி வீட்டுக்கு போனாலே சுவாரஸ்யத்துக்குக் குறைவிருக்காது. சித்தி கல்கியிலிருந்து கிழித்து, பைண்டிங் பண்ணி வைத்திருந்த 'சிவகாமியின் சபதம்' அங்குதான் படித்தேன். சித்தப்பாவின் அப்பா முருகேச கவிராயர் தாத்தா - 'கலைமாமணி' வாங்கிய பெரிய மரபுக் கவிஞர். பழனி மலையின் கோயில் சுவர்களில் அவர் எழுதிய கவிதைகள்தான் நிறைய இருக்கும் (அப்போது அவர் இறந்து சில வருஷமாகியிருக்கும்). அவர் எழுதிய தூய கவிதை நூல்களைப் படிப்பேன். அந்தப் பாதிப்பில் நானும் மரபுக் கவிதை எழுதிப் பார்ப்பேன். 'சைட் அடிக்கப் போங்கோ. கலர்களைப் பார்த்து - அழுங்கோ தொழுங்கோ விழுந்துருகி -கும்பிடுங்கோ உங்கள் குறையெல்லாம் தீர்ந்துவிடும் - நம்பிடுங்கோ சொல்லிவிட்டேன் நான்'. இதை எனது பள்ளி ஆசிரியர் கணபதி சாரிடம் காண்பித்தபோது, 'அடி, தொடை, சீர் எல்லாம் பிரமாதமா இருக்கு. வார்த்தை ஜாலம் அற்புதம்! ஆனா உனக்கு வேற சப்ஜெக்டே கிடைக்கலையா? அறிவு கெட்டவனே!' என்றார்.

சித்தி ஊரில் இருந்தாலும் தம்பி பிரபு மட்டும் சின்ன வயதிலிருந்தே மதுரையில் அம்மாச்சி - தாத்தா வீட்டிலேயே படித்து

வளர்ந்தான். அவன் எங்கள் குடும்பத்திலேயே அதிக மார்க்குகள் எடுத்தவன். நல்ல ஞாபக சக்தி உடையவன். எந்தத் தேதியில் எந்தப் படம் ரிலீசானது என ஃபிலிம் நியூஸ் ஆனந்தனுக்கு இணையாகப் புள்ளிவிபரம் சொல்வான். 'இதையெல்லாம் ஏண்டா அநாவசியமா நீ மெமரி பண்ணி வச்சிருக்க? என்ன பிரச்னை? டாக்டர்கிட்ட போகலாமா?' என்பேன்.

சித்திக்குத்தான் நான் நிறைய கடிதங்கள் எழுதியுள்ளேன். தம்பியைப் பார்க்க மாதம் இருமுறை வருவார். என்னையும் ரொம்ப உற்சாகப் படுத்துவார். சின்ன வயதிலிருந்தே என்னை ஓவியம் வரைவதில் ரொம்ப ஈடுபடுத்தியவர். நான் கல்லூரி படித்துக்கொண்டிருந்தபோதே, கரஸ்பாண்டஸ்சில் டிப்ளமோ இன் ஜெர்னலிசம் படிக்க வேறு யாருக்கும் தெரியாமல் பணம் கட்டி என்னை வழிப்படுத்தியவர். பின்னால் எனக்கு அது பெரும் உதவியாக இருந்தது.



* சித்தி குடும்பம்

அன்று முதல் இன்று 'புலிகேசி', 'கடவுள்' வரை என்னை வழிப்படுத்திக்கொண்டிருப்பவர். இப்போதும் நிறைய பேசுவார்.

'அறை எண் 305-ல் கடவுள்' படம் ரிலீஸை ஒட்டி, கோவையில் ஒரு விழாவுக்குப் போய்விட்டு காரில் திரும்பிக்கொண்டிருந்தேன். குறுக்கு வழியில் வந்தபோது நடுவில் ஒரு ஊரை எங்கோ பார்த்தது போல் இருக்க, தயக்கமாக வண்டியை நிறுத்தினேன். அது சின்னமண்டவாடி! இருபத்திரண்டு வருஷங்களுக்கு பின் அந்த ஊரில் இறங்கி நடந்தேன். அதே பள்ளிக்கூடம் சற்றுப் பழமையாய். சித்தப்பா முன்பே ரிட்டையர்டு ஆகிவிட்டார். சித்தி - சித்தப்பா இப்போது மதுரைக்கே வந்துவிட்டனர். அந்த ஊரின் ஆறு, மரங்கள், வீடுகள், மலைகள், வீதிகள் எல்லாமே எனக்கு மிகச் சின்னதாகிவிட்டது போல் இருந்தன. குழம்பிவிட்டேன்.

இப்போது நிஜத்தில் நிறைய பிரமாண்டங்கள் பார்த்துவிட்டதால், அப்போதைய நினைவின் பிரமாண்டம் இப்போது பொசுக் என சுருங்கிவிட்டது போல இருக்கலாம். இது சைக்காலஜி ரீதியான அறிவியல். ஆனால், ஆன்மாவில் ஒரு மாற்றமும் இருக்காதுதானே! என் சித்தி, சித்தப்பாவும், சின்னமண்டவாடியும் எனக்குத் தந்த மகா அனுபவம் எப்படிச் சுருங்கும்? யாரும் என்னைக் கவனிக்கவில்லை. சிறுவர்கள் சிலர் கிரிக்கெட் விளையாடிக்கொண்டிருந்தனர். அதே பள்ளி வராந்தாவில் நான்கைந்து எருமைத் தயிர் பார்சல் வாளிகள் இருந்தன.

**(பேசுவேன்)**

# குமரிக்கு 5 கோடி!

**க**ன்னியாகுமரி மாவட்டம் நாகர் கோவிலில் இருந்து 40 கி.மீ தொலைவில் இருக்கிறது திற்பரப்பு. கடந்த ஆண்டைப் போன்றே இந்த ஆண்டும் 'திற்பரப்பு அருவிவிழா' என்று அரசு அறிவித்தது. இது, ஓணம் விழாவை ஒட்டி அமைந்ததால், மக்களுக்கு இரட்டிப்பு மகிழ்ச்சியாகிவிட்டது. இந்த விழாவை முன்னிட்டு, பெண்களுக்கு அத்தப்பூ கோலப் போட்டி ஒன்றும் நடத்தப்பட்டது. அத்தப்பூ கோலம் என்பது, ஓணம் பண்டிகையை ஒட்டி வரும் மகாபலி மன்னனை வரவேற்கும் பொருட்டு, மக்கள் அமைக்கும் பூக்கோலம்!

அதில் மிகச் சிறப்பான பூக்கோலத்தை அமைத்த பெண்களுக்குப் பரிசுகளும் வழங்கப்பட்டன.

மாநில சுற்றுலாத் துறை அமைச்சர் சுரேஷ்ராஜன், சட்டமன்ற உறுப்பினர்கள் உள்ளிட்ட பலரும் கலந்து கொண்ட இந்த அருவி விழாவில், அமைச்சரின் ஓர் அறிவிப்புதான் பெரும் வரவேற்பைப் பெற்றது.

''கன்னியாகுமரி மாவட்டதில் உள்ள சுற்றுலாத் தலங்களைப் பராமரிக்கவும், சுற்றுலாப் பயணிகளுக்கான வசதிகளை மேம்படுத்தவும் ரூபாய் ஐந்து கோடி நிதி ஒதுக்கப்பட்டிருக்கிறது.''

நல்ல விஷயம்தான். இதனால், சுற்றுலாத் துறைக்கு வருமானம் பெருகும். அதோடு, அந்தப் பகுதியில் உள்ள மக்களுக்கான வாழ்வாதாரமும் உறுதிப்படும். சரியாய் நடந்தால் சரி!

– த.இ.தாகூர்

* விழாவில்...



# ராமன் தேடிய சீதை

**ப்ளஸ்**

- அழகழகாய் வந்து போகும் ஐந்து ஹீரோயின்கள்.
- யாருக்கும் யாரும் சவால் விட்டுக் காதைக் கிழிக்காத கதை.
- வன்முறையோ இரத்தமோ இல்லை.
- படத்துக்குப் பக்கபலமாய் கேமரா...
- ரம்யா நம்பீசனை அப்பா மணிவண்ணனுடன் சேர்த்து வைத்தல்.
- ஆறுதலாய் வித்யாசாகர்...

**மைனஸ்**

- 'சேரன்' உட்பட எல்லோரும் வீணடிக்கப்பட்டது.

**ஒற்றை வரியில் சொன்னால், 'ராமனுக்கு சீதை கிடைத்தாள்; ரசிகர்களுக்குத்தான் வனவாசம்!'**

**- மோகன் ஜீ**

# கிரேஸி ஜெராக்ஸ்?

● சீர்காழி சாமா, சீர்காழி

*உங்களை மாதிரி வேறு யாராவது இருக்கிறாரா...?*

இருக்கிறார்... அவரும் நான்தான். அவரை நான் பார்த்ததில்லை; ஆனால் அவர்தான் என்னைப் பார்த்துக் கொள்கிறார்.

● பி. ராமனாதன், சென்னை

*'மெட்ராஸ் - ஐ' மதுரையில் வந்தால் என்ன பெயர்...?*

மதர் - Eye மீனாட்சி தன் மதுர Eyeயால் காக்கும் மதுரைவாசிகளுக்கு எந்தக் கண் திருஷ்டியும் வராது.

● எடக்காடு பீ.சேகர், ஊட்டி

*பலகாரத்தில் தங்களுக்குப் பிடித்தது எது...?*

ஒரு காரத்துக்கே நான் 'உஸ்...உஸ்' என்று பாம்பு விடுவேன்... பல காரம் சாப்பிட்டால் நான் பஸ்மமாகி விடுவேன்!

● எஸ்.முத்துக்குமாரசுவாமி, மயிலாப்பூர்

*நரம்பில்லா நாக்கு என்கிறார்களே... ஏன்?*

வரம்பில்லா நாக்கு என்பதுதான் வாய் தவறி நரம்பில்லா நாக்கு என்றாகிவிட்டது.

● ரா. பிரசன்னா, மதுரை

*எத்தனை முறை விழுந்தாலும் எழுந்து விடுபவர்களுக்கு என்ன பட்டம் தரலாம்...?*

'விழா-நாயகர்கள்'

● ஏ.கே.நாசர், திருப்பட்டினம்

*உங்களுக்குப் பிடித்தமான இசைக் கருவி எது...?*

லால்குடியின் வயலின், சீனிவாசனின் மாண்டலின், காரைக்குடி மணியின் மிருதங்கம், ரமணியின் புல்லாங்குழல் இப்படி சொல்லிக்கொண்டே போகலாம்... முக்கியம் கருவி அல்ல கர்த்தா...

● த. சத்தியநாராயணன், அயன்புரம்

*சென்சார் வெட்டு - மின்சார வெட்டு... ஒப்பிடவும்...?*

பார்க்கக்கூடாத இருட்டடிப்பு - பார்க்க முடியாத இருட்டடிப்பு...!

● ஜே.துரைராஜ், ஆலப்பாக்கம்

*? முகவரியை மாற்றுவது போல தலைவிதியை மாற்ற முடியுமா...?*

தலைவிதியைக்கூட மாற்றிவிடலாம்... ஆனால் இப்போது நிலவும் வீட்டு



கிரேஸியைக் கேளுங்கள்

'விழா-நாயகி'யென யாருக்காவது பட்டம் கொடுத்து இருக்கிறீர்களா கிரேஸி சார்?

வாடகை வீச்சைப் பார்த்தால், முகவரியை மாற்றுவது மகா கஷ்டம்... அதையும் மீறி மாற்ற வேண்டிய கட்டாயம் ஏற்பட்டால் அதுதான் நம் தலைவிதி...!

- எம்.அசோக்ராஜா, அரவக்குறிச்சிப்பட்டி

கவி கெட்டால் குப்பையிலே... கன்வி கெட்டால்...?

கருப்பையிலே...

- என். பாலசுப்பிரமணியன், சென்னை

மரங்களை மனிதன் வெட்டுவது எதைக் காட்டுகிறது...?

மர மண்டையை!

- ராகினி, கும்பகோணம்

நீங்கள் சதா மெல்லுவது எது... சூயிங்-கம்மா? பபிள்-கம்மா?

''நாட-கம்!''



என்றும் மறையாத பாடல்களின் தொகுப்பாக 'எங்கும் நிறைந்தாயே'. மறுநாள் ஞாயிறு, மீனாட்சி சித்தரஞ்சன் மாணவிகளின் நாட்டியம். புகழ்பெற்ற எம்.எஸ். பாடல்களுக்கான பரதநாட்டிய நிகழ்ச்சி. செப்டம்பர் 15, திங்கள் அன்று மதுரை மாணவ, மாணவிகளுக்கான, எம்.எஸ். பற்றிய க்விஸ் புரோக்ராம். மாலை நேரத்தில் சங்கீதா சிவகுமார் வழங்கிய 'மதுர வாணி' இசைக் கச்சேரி.

செப்டம்பர் 16, எம்.எஸ். அவர்களின் பிறந்தநாள். மதுரை மேலமாசி வீதியில் எம்.எஸ். பிறந்த வீட்டில், மலரஞ்சலியையும் பள்ளி மாணவிகள் எம்.எஸ்ஸின்

# இசையாய்

**வி**ழாக்களை வித்தியாசமாக நடத்திக் காட்டுவதில், மதுரைவாசிகள் தனி ரகம். அப்படித்தான் நிகழ்ந்தேறியது, இசையரசி எம்.எஸ். அவர்களின் பிறந்தநாள் விழா. அவர் பிறந்த மண்ணில், ஐந்து நாள் விழாவாக அமர்க்களப்பட்டது. INTACH (Indian National Trust for Art and Cultural Heritage) என்கிற அமைப்பின் மதுரை கிளையின் கன்வீனர் அரவிந்த்குமார் சங்கர், ஐந்து நாள் விழாக்களையும் அழகிய மாலையாகத் தொகுத்து இசையரசிக்கு அர்ப்பணித்துள்ளார்.

செப்டம்பர் 12, வெள்ளி அன்று பியானோ கலைஞர் அனில் ஸ்ரீனிவாசன், வாய்ப்பாட்டுக் கலைஞர் சுபிக்ஷா ஆகியோர் அளித்த இசை விருந்து 'காற்றினிலே வரும் கீதம்'. செப்டம்பர் 13, சனிக்கிழமை, லக்ஷ்மி ரெங்கராஜன் வழங்கிய, எம்.எஸ்.ஸின் பாடல்களைப் பாடி இசையஞ்சலியையும், சமர்ப்பித்தனர். வீதி முழுவதுமாக எம்.எஸ்.ஸின் இசை பக்தர்கள். அவர் பிறந்து தவழ்ந்து விளையாடிய வீட்டினை, எட்டிப் பார்க்க முடிந்ததே என்கிற ஆத்ம திருப்தி அனைவர் முகங்களிலும். இறுதி நிகழ்வாக மதுரை, டி.வி.எஸ் லெக்ஷ்மி மெட்ரிகுலேஷன் மேனிலைப் பள்ளி விழா அரங்கினில், கல்கி ராஜேந்திரன் தலைமையில், ரேவதி சங்கரன் நிகழ்த்திய ஹரிகதை நிகழ்ச்சி. இரண்டு மணி நேரம் கடந்துபோனதே, மன்னிக்கவும், கரைந்து போனதே தெரியவில்லை!

❖ ரேவதி சங்கரன்



‘‘**எ**ம்.எஸ்.எஸ். என்றாலே, அது இசையரசியைக் குறிக்கும். அந்த மூன்றெழுத்துக்களை Melody - Sincerity - Selfless Service என்று அர்த்தப் படுத்திக் கொள்வதும் ரொம்பப் பொருத்தம்.

சென்னையின் பிரபல காது மூக்கு தொண்டை மருத்துவ நிபுணர் ஒருவர், எம்.எஸ்.ஸைப் பரிசோதித்து விட்டு, 'இது போன்றதொரு குரல் வளம் கொண்ட அற்புதமான தொண்டை அமைப்பு வேறு யாருக்கும் அமைந்ததில்லை' என வியந்து கூறியுள்ளார். அந்தக் குரல்வளம் நமக் களித்த பெருங்கொடை 'மெலடி'. அவரி டம் எப்போதும் நிறைந்திருந்த உண்மைத் தன்மைக்கும், கடின உழைப்புக்கும், அவர் ஒருவரே 'சின்சியாரிட்டி' எனப்படும் சொல்லுக்கு நமக்கான ரோல் மாடல். 'செல்ஃப்லெஸ் சர்வீஸ்' என்பது தனக்

**எம்.**எஸ். வாழ்க்கையினை ஹரிகதை வாயிலாக அபிநயித்து நிகழ்த்திக் காட்டிய திருமதி ரேவதி சங்கரன், பத்து வயதிலேயே எம்.எஸ்.ஸிடமிருந்து வெளிப்பட்ட இசைத்திறன், பதினேழு வயதில் மியூஸிக் அகாடமியில் பாடியது, காதோரங்களில் அந்தச் சுருள்முடி, (நானும் எவ்வளவோ செஞ்சு பார்த்தேன். காதோரச் சுருள் வரவேயில்லை. எல்லாம் இயற் கையா அமையணும். எம்.எஸ். அம்மா பாட்டு மாதிரி!), சதாசிவம் - எம்.எஸ். இனிய சந்திப்பு, காதலாய்க் கசிந்துருகி கல்யாணம் செய்துகொண்டது, பிறருக்குத் தருவதற்காகவே வருவாய் ஈட்டியவரை

# வாழும் பேரரசி



* இசை அஞ்சலியாய்...


* நாட்டிய அஞ்சலியாய்...

கென வந்த சன்மானத்தின் பெரும் பகுதி யினை சமூக மற்றும் ஆன்மிக செயல்பாடு களுக்கு அள்ளித் தந்ததில் அமைந்துள்ளது. தமக்குக் கிடைத்த எம்.எஸ். எனும் வைரத்தை, பட்டை தீட்டி பாரத ரத்னா வாக ஜொலிக்க வைத்தவர் அவருடைய கணவர் திரு. சதாசிவம்'' என முத்தாய்ப் பாக தலைமை உரையினை நிறைவு செய் தார் கல்கி ராஜேந்திரன்.

இசைப் பேரரசி என காஞ்சிப் பெரியவர் முன்மொழிந்தது போன்ற பல நிகழ்வு களை ஹரிகதையினூடே தொட்டுச் சென் றார். அந்தக் கூட்டத்தின் பேரமைதியில் 'காற்றினிலே வரும் கீதம்' பாடல் எம்.எஸ். குரல் ஒலிப்பதிவாகவே ஒலித்து, பேரரசி யின் இசை பக்தர்களுடைய நெஞ்சங்களில் இனிப்பாய் படிந்தது.

தொகுப்பு : **ஸ்ரீரங்கம் திருநாவு**



# ராசாவுக்கு அனுப்புங்க!

**இ**ன்றைய அரசியல் தலைவர்கள் தங்களது ஆதாயத்துக்காகப் பேசியே, மக்களின் நாடித்துடிப்பைச் செயலிழக்கச் செய்வது ஒன்றுதான் நடந்து வருகிறது. யாருமே தீவிரவாதத்தின் வேர்களை அடியோடு நறுக்கப் பாடுபடவில்லை என்பதை உணர்த்திய தலையங்கம் அருமை!

**- ரேவதிப்ரியன், ஈரோடு**

**ஒ**வ்வொரு வாரமும் தராசுவின் பதில்கள் ஒவ்வொன்றிலும் உண்மை, துணிச்சல், தெளிவான விளக்கம். படிக்கப் படிக்க ஆர்வத்தைத் தூண்டுகிறது!

**- கீதா முருகானந்தம், திருவைகாவூர்**

**வி**ஜய்யின் பேட்டி மனத்தைத் தொடுகிறது. முத்தாய்ப்பாக இறுதி வரிகளில், 'ஜெயிப்பது நிஜம்! தோல்வியைக் கண்டு துவளக்கூடாது' என்று சொன்னது சபாஷ்!

**- எஸ். அமிர்தா சௌந்தர், சென்னை - 26**

'**த**பாலுக்குள் காய்கறி' ஹாஸ்யமிக்க உரையாடலை ஹிந்தி மொழியாக்கம் செய்து ராசாவின் தபால் துறைக்கு அனுப்பினால், டெல்லியில் உள்ள மேற்படி துறை அதிகாரிகள், பணியாளர்கள் - அரிய யோசனைகள் (சில அல்ல பல என்று) என்று ஏற்றுக் கொள்வார்களா? நான் மனம் விட்டுச் சிரித்தேன். வயிறு புண்ணாகிவிட்டது.

**- வி.ஆனந்தகிருஷ்ணன், சென்னை - 101.**

**தீ**விரவாதத்தை இரு கட்சிகளாலும் கட்டுப்படுத்த முடியாது என்பதை கார்ட்டூனில் செம போடு போட்டுக் காட்டிட்டீங்க!

**- வே. முருகேசன், சென்னை - 88**

**ஏ**ழு இடங்களில் மட்டுமே காணக் கிடைக்கும், 'காட்சி கொடுத்த நாயனார்' செப்புத் திருமேனியை அழகின் வடிவாக, அருளின் வடிவாகக் கண்டு களிப்புற்றோம்.

**- சி.என். ரமாதேவி, சென்னை - 83**

**சு**தா சேஷய்யன் சொல் வண்ணத்தில், வேதாவின் கைவண்ணத்தில் 'ஸ்ரீ லலிதா' ஆரம்பமே அமர்க்களம், ஆனந்தம்!

**- எஸ்.வெங்கடரமணன், சென்னை - 33**

**ந**ம் ஊர் பெண்களின் மனநிலையைப் படம் பிடித்து காட்டியது 'வேவு' சிறுகதை. பாராட்டுக்கள்!

**- என்.எஸ்.மணிமாறன், திருவண்ணாமலை**

**ந**றுக்குத் தெறித்த மாதிரி அமைந்த 'அலிபாபா' பட விமர்சனம், அபாரம்பா!

**- த.சத்தியநாராயணன், அயன்புரம்**

## வட்டமேஜை

# Dr.Kamakshi Memorial Hospital



Dr. T.G. Govindarajan
President -Founder -
Medical Director

தமிழ்நாட்டிலேயே முதல்முறையாக உடலிலுள்ள புற்றுநோய்
மற்றும் இதர நோய்களை எளிதில் கண்டறிய உதவும்

## PET CT Scan

மருத்துவ சேவை நிறுவனத்தில் ஒரு மைல்கல்
தமிழகத்தில் இதுவே முதல் முறை

**Dr. காமாட்சி மருத்துவமனை**

கேன்சர் இன்ஸ்டிடுட் (wia)
இணைந்து பெருமையுடன்
அறிமுகம் செய்துள்ளது




**CANCER INSTITUTE**
Canal Bank Road
Gandhi Nagar, Adyar
Chennai - 20
Cell : 93814 36899
93814 36896

## தமிழ் நாட்டில் முதல் PET CT Scan

**இந்தியாவில் 4, 5 இடங்களில் மட்டுமே உள்ள இந்த ஸ்கேனிங் கருவியின் சிறப்பம்சங்கள்:**

* பெட் சி.டி.ஸ்கேன் என்பது உடல் அணுக்களின் செயல்திறன் பற்றியும் அணு பெருக்கத்தைப் பற்றியும் முழு தகவல்களைத் தரவல்லது.
* முக்கியமாக பெட் சி.டி.ஸ்கேன், மனிதனின் உச்சந்தலையிலிருந்து, உள்ளங்கால் வரை முழுவதும் பரிசோதிப்பதால், உடலில் எங்கெல்லாம் புற்றுநோய் இருக்கிறது? அது வேறு எங்கெல்லாம் பரவியிருக்கிறது? நோயின் தீவிரம் எந்த அளவு உள்ளது? என்பதை எல்லாம் துல்லியமாகக் கண்டறியப் பயன்படுகிறது.
* அதேபோல், ரேடியோதெரபி, கீமோதெரபி போன்ற சிகிச்சைகளுக்குப் பின் 'பீரியாடிகல் ரிவியூ' மூலம் நோயின் தாக்கம் எவ்வளவு குறைந்துள்ளது என்பதையும் கண்டறியலாம்.
* மூளையில் ஏற்படும் 'அல்ஸைமெர்ஸ்', 'பார்க்கின்சன்ஸ்', புற்றுநோய் போன்ற நோய்களை கண்டறியவும், அவற்றுக்கு எளிய முறையில் கண்டறியவும், 'பெட் சி.டி. ஸ்கேன்' பயன்படுகிறது.
* புற்றுநோய்க்கு சிகிச்சை அளிக்கும் மருத்துவர்களுக்கு எந்த மாதிரியான சிகிச்சை முறையை பின்பற்ற வேண்டும் என்று தெளிவாக உணர்த்துகிறது. இதயத்தில் உள்ள பிரச்னைகள் மற்றும் தசைகளின் செயல்பாடுகளை அறிய உதவுகிறது.

இலவச ஆலோசனைக்கு: எஸ்.சுபாஷினி - 93451 20265, 93810 30712



#1, Radial Road, Pallikaranai, Chennai - 600 100.
Tel : +91-44-22469200 (30 Lines), 66300300 (30 Lines), Fax : 22463282
E-mail : info@drkamakshimemorialhospital.org
Website : www.drkamakshimemorialhospital.org

